



ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீஸூக்திமாலா மலர் 9

பரமகாருணிகரான பெரியவாச்சான்பிள்ளை
மணிப்ரவாள நடையிலும்
ச்ருதப்ரகாசிகாசார்யர் ஸம்ஸ்க்ருதத்திலும் அருளிச்செய்த

# கத்யவ்யாக்யானங்கள்

த$_3$ர்ஶந ஸ்தா$_2$பகரான எம்பெருமானார் அருளிய
கத்யத்ரயத்துடன் கூடியது.

## (ப்ரமாணத்திரட்டு முகவுரையுடன் கூடியது)

**பதிப்பாசிரியர் :**
கீர்த்திமூர்த்தி K. ஸ்ரீநிவாஸ அய்யங்கார் ஸ்வாமி
ஆசிரியர்: ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்.

**மூன்றாம் பதிப்பு**
ப்ரமாதி வருடம் ஆடி மாதம், ரோஹிணி [7-8-99]

**பதிப்பித்தவர்கள் :**

**1. ஸ்ரீ.ரா.ஸ்ரீ.கி.ஸ்ரீநிவாஸய்யங்கார் குடும்ப
தர்ம சொத்துக்களின் ஆதரவில் வெளிவருகிறது.**



**2. ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ**
214, கீழ உத்தரவீதி, ஸ்ரீரங்கம், திருச்சி-6.

விலை ரூ. 60 /- தபாற்செலவு தனி

முதற்பதிப்பு: 1953
இரண்டாம் பதிப்பு: 1976
மூன்றாம் பதிப்பு:1999

அச்சிட்டோர்:
**ஸ்ரீரங்கநாச்சியார் அச்சகம்,**
214, கீழ உத்தர வீதி,
ஸ்ரீரங்கம்,
திருச்சி - 620 006.

மூன்றாம் பதிப்பு: ப்ரமாதி 1999
உபயோகப்படுத்தப்பட்ட காகிதம் : Cream wove 13.7kg Seshasayee Paper Mills.
விலை: ரூ.60/-.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# முதல் பதிப்பின் முகவுரை

நமது த3ர்ஶநஸ்த2ாபகரான எம்பெருமானர் அருளிச்செய்த தி3வ்யக்3ரந்த2ங்கள்,- 1. ஸ்ரீப4ாஷ்யம், 2. வேத3ாந்த ஸாரம். 3. வேத3ாந்த தீ3பம், 4. வேத3ார்த்த2ஸங்க்3ரஹம், 5. கீ3தாப4ாஷ்யம், 6. நித்யக்3ரந்த2ம், 7. ஶரணாக3திக3த்3யம், 8. ஸ்ரீரங்கக3க3த்3யம், 9. ஸ்ரீவைகுண்ட2க3த்3யம் என்னும் ஒன்பதேயாகும். இவற்றுள் முதல் மூன்றும் ப்3ரஹ்மஸூத்ரங்களை விவரிப்பவையாகவும், நான்காவது ப்ரத4ாநமான பல வேத3வாக்யங்களை விவரிப்பதாயும், ஐந்தாவது கீ3தையின் கருத்தைக் காட்டுவதாயும், ஆருவது ஸ்ரீ வைஷ்ணவனுடைய நித்யாநுஷ்ட2ாநப்ரகாரத்தை உபதே3ஶிப்பதாயும், கடைசி மூன்றும் — நம் ஸித்3த4ாந்தத்திற்கே உயிர்நிலையாயிருக்கும் ப்ரபத்தியின் ஸ்வரூபத்தையும், அதை அனுஷ்டி2க்கும் ப்ரகாரத்தையும் விரிவாகவும் தெளிவாகவும் உபதே3ஶிப்பவையாயும் அமைந்துள்ளன. ப்ரபத்திவைப4வத்தைப் பேசுவதாலும் அஷ்டாக்ஷரம், த்3வயம், சரமஶ்லோகம் என்னும் ரஹஸ்ய த்ரயங்களை–முக்கியமாக ப்ரபந்நனுகிற கைக்குழந்தைக்குத் தாய்ப்பால்போலே த4ாரக போஷகபோ4க்3யமாயிருக்கும் த்3வயத்தை–விவரிப்பதாலும், ப4க3வத்ஸ்வரூப ரூப கு3ண விபூ4திகளைத் தெளிவாக உபதே3ஶிப்பதாலும் மற்ற கிரந்தங்களைக்காட்டிலும் நம் ஆசாரியர்கள் ‘க3த்3யத்ரயம்’ என்னும் ஸமுத3ாயநாமத்தைப்பெற்ற இம்மூன்று தி3வ்யக்3ரந்த2ங்களையும் மிகவும் ஆத3ரித்துப்போருவர்கள். இக்காரணங்களாலேயே, மற்ற கிரந்தங்களில் ஈடுபடத் தகுந்த ஜ்ஞாநஶக்த்யாதி3களும் அவகாஶமும் இல்லாதவர்களும், இக்க3த்3யத்ரயங்களின் பொருளையாவது ஒரு ஸத3ாசாரியன் மூலமாகக் கற்று உணரவேண்டுமென்பது தெளிவாகும்.

இப்படிப்பட்ட பெருமைபொருந்திய இந்த க3த்3யத்ரயங்களுக்குப் பல மஹாசார்யர்கள் வியாக்கியானமருளியிருப்பதாக ப்ராசீந க்3ரந்த2ங்களிலிருந்து வெளியாகிறது.

மணவாளமாமுனிகளருளிய தத்வத்ரய வ்யாக்2யாநம் ஈஶ்வரப்ரகரணம் இரண்டாவது சூர்ணையில் "'ஹேய ப்ரத்யநீகத்வமாவது, — ஆஶ்ரிதருடைய ஹேயநிராஸகத்வத்துக்கு அடியான ஹேயப்ரதிப4டத்வமென்னவுமாம்' என்னுமொரு யோஜனையுமுண்டிறே, க3த்3யவ்யாக்2யாநங்களிலே நஞ்சீயர் ஆச்சான்பிள்ளை முதலான ஆசார்யர்கள் அருளிச்செய்தது" என்று அருளியிருப்பதிலிருந்து நஞ்சீயரும் பெரியவாச்சான் பிள்ளையும் க3த்3யவ்யாக்2யாநமருளியுள்ளனர் என்று விளங்குகிறது. பெரியவாச்சான்பிள்ளையின் க3த்3ய வ்யாக்2யாந ஸ்ரீஸூக்திகள், ப்ராசீநர்களான ரஹஸ்யவிவேககாரர், ஸ்ரீ வைஷ்ணவ ஸமயாசார நிஷ்கர்ஷகாரர் முதலானோரால் எடுக்கப்பட்டுள்ளன. பெரியதிருமுடியடைவு முதலான நூல்களிலும் பெரியவாச்சான் பிள்ளை க3த்3யவ்யாக்2யாநமருளியதாகக் காட்டப்பட்டுள்ளது. தத்வத்ரயவ்யாக்2யாநத்திலேயே ஈஶ்வரப்ரகரணம் ஆறுவது சூர்ணையில் "'அனுகூலஜ்ஞாநமே ஸ்வரூபமாயிருக்க, ஜ்ஞாநாநந்த3ங்களென்று பிரித்துச் சொல்லுகிறது இரண்டுமுண்டாகைக்காக' என்றிறே இவர்தாம் இட்டருளின க3த்3யவ்யாக்2யானத்திலே அருளிச்செய்தது" என்று அருளியிருப்பதிலிருந்து பிள்ளைலோகாசார்யரும் க3த்3ய வயாக்2யாநம் அருளியிருப்பதாகத் தெரிகிறது. ஸ்ரீவேதா3ந்த தே3சிகன் அருளிச்செய்த க3த்3யபா4ஷ்யத்தில் முதல் சூர்ணையில் "**அஸ்மந்மாதரமித்யபி ஸ்ரீவிஷ்ணுசித்தாத3ய: பட2ந்தி வ்யாசக்ஷதே ச,—'யாமுநமுநிவம்ஶஜநநேந புநஶ்ச விஶேஷேண அஸ்மந்மாதரமிதி' இதி**" என்றும். சது:ஶ்லோகீ இரண்டாவது ஶ்லோக பா4ஷ்யத்தில் "**உக்தம் ச ஸ்ரீவிஷ்ணுசித்தைர் க3த்3ய வ்யாக்2யாநாரம்பே4 — 'மாத்ருத்வைகரூபாம் ஶ்ரியம் ப்ரபத்3யதே। மாதா ஹி ஹிதாத3பி புத்ரஸ்ய ப்ரியமேவ பஶ்யதி, பிதா தூப4யம் பஶ்யதி; அதோ து3ண்ட3த4ரத்வஹீநதைவ அவலம்ப3நமஸ்யாம் த3ஶாயாமாஸீத்॥' இதி**" என்றும் அருளியிருப்பதிலிருந்து ஸ்ரீராமாநுஜருடைய ப்ரியசிஷ்யர்களில் ஒருவரான ஸ்ரீவிஷ்ணு



சித்தரென்னும் எங்களாழ்வான் ரஸக4நமானதொரு க3த்3ய வ்யாக்2யாநத்தை வடமொழியில் அருளியுள்ளாரென்று தெரிகிறது. ஸ்ரீ தே3ஶிகக்3ரந்த2ங்களிலே பலவிடங்களில்-வ்யாஸார்யர் என்னும் பெயரையுடையவரும், எங்களாழ்வானுடைய சிஷ்யரான நடாதூரம்மாளென்னும் வரத3 கு3ருவின் சிஷ்யருமான ஶ்ருதப்ரகாஶிகாசார்யர் அருளிய க3த்3யவ்யாக்2யாந ஸ்ரீஸூக்திகள் எடுக்கப்பட்டுள்ளன

இப்படிப் (பல மஹாசார்யர்கள் பா4ஷ்யமிட்டிருந்தபோதிலும், பெரியவாச்சான்பிள்ளையருளிய விரிவான மணிப்ரவாள வ்யாக்2யானமும், ஶ்ருதப்ரகாஶிகாசார்யர் வடமொழியிலருளிய ஸங்க்3ரஹமான ஶரணாக3திக3த்ய வ்யாக்2யாநமும், தே3ஶிகனருளிய க3த்3யத்ரயபா4ஷ்யமுமே இப்போது ப்ரசாரத்திலுள்ளன. இவற்றில் தே3ஶிகபா4ஷ்யத்தின் க்3ரந்த2மாலைப் பதிப்பு தற்சமயம் ஸுலப4மாயிருக்கிறபடியால், து3ர்லப4மான மற்ற இரண்டு வியாக்கியானங்களை மட்டும் இங்கு அச்சிட்டுத்தருகிறோம். ஶ்ருதப்ரகாசிகாசார்யருடைய பா4ஷ்யம் தெலுங்குலிபியில் மட்டும் க்3ரந்த2 முத்3ராபகஸபை4யாரால் அச்சிடப்பட்டுள்ளது. பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்2யாநம் க்3ரந்த2 முத்3ராபக ஸபையாரால் தெலுங்குலிபியிலும், அதற்குப் பல வருஷங்கட்கு முன் (1882-ல்) திருமழிசை மஹாபா4ஷ்யம் ஸ்ரீ உ. வே. ஸ்ரீரங்க3ாசாரியர் ஸ்வாமியால் தமிழ்லிபியிலும் அச்சிடப்பெற்றுள்ளன. இவ்விரண்டு பதிப்புகளுக்குள்ளும் மிகுந்த பாட2பே4த3ங்கள் காண்கின்றன. ஶரணாக3திக3த்3ய வ்யாக்2யாநத்தின் பிற்பாதியில் இரண்டு பதிப்புகளும் மிகவும் வேறுபடுகின்றனவாகையால் தமிழ்ப்பதிப்பை மேலேயும் தெலுங்குப்பதிப்பைக் கீழேயும் தந்திருக்கிறோம். மற்றவிடங்களில் முக்கியமான பாட2பே4த3ங்களைக் குறித்திருக்கிறோம்.

ஶ்ருதப்ரகாசிகாசார்யரின் வ்யாக்2யாநத்தில் தெலுங்குப்பதிப்பில் சில பாட2ப்பிறழ்வுகளும் அச்சுப்பிழைகளும்

காண்கின்றன. அவற்றைக்காட்டுவோம். இரண்டாவது சூர்ணையில் (**அநவதி4காதிஶயப்ரிய**) என்னும் பத2த்தை வ்யாக்2யானம் செய்யுமிடத்தில் "**ப்ரயோஜநாந்தரத்வாப4ாவேऽபி ஸாவதி4காதிஶய ப்ரியத்வவ்யுத3ாஸார்த்த2ம் அநவதி4காதிஶயப்ரியத்வமுக்தம்**" என்று பாட2ம் காண்கிறது. "ப்ரயோஜநாந்தரத்வாப4ாவேऽபி" என்பது அந்வயிக்கவில்லை. "**ப்ரயோஜநாந்தரார்த்த2த்வ** வ்யுத3ாஸாய அநந்ய ப்ரயோஜநத்வம்" என்னும் முன்வாக்யத்திற்போலவே "**ப்ரயோஜநாந்தரார்த்த2த்வாப4ாவேऽபி**" என்றிருக்கவேண்டுமென்பது தெளிவு. ஐந்தாவது சூர்ணையில் (பரமயோகி3... ஸ்வரூபஸ்வப4ாவ) என்னுமிடத்து வ்யாக்2யாநத்தில் "பரமஸ்வரூபம்—நியந்த்ருஸ்வரூபம்। பரமஸ்வப4ாவ:—**ஸௌலப்4ய நிரூபகாத3ந்யோ** நிருபாதி4கத4ர்ம: ஸ்வப4ாவ:" என்று காணும் பாட2ம் நிரர்த்த2கமாயுள்ளது. இப்பாட2த்தை அப்படியே கொண்டு "ஸௌலப்4யத்தை நிரூபிக்கக்கூடிய ஸ்வப4ாவத்தைக் காட்டிலும் வேறுபட்ட ஸ்வப4ாவம்" என்று ஒரு பண்டி3தரால் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டது. இம்மொழிபெயர்ப்பும் நிரர்த்த2கமாகவேயுள்ளது. "பரமஸ்வப4ாவ:—**ஸௌலப்4யம்**। நிரூபகாத3ந்யோ நிருபாதி4கத4ர்ம: ஸ்வப4ாவ:" என்பது சரியான பாடம். ஸ்வரூபஶப்3த3த்தால் ஸ்வரூபநிரூபகத4ர்மமான நியந்த்ருத்வமாகிற பரத்வமும், ஸ்வப4ாவஶப்3த3த்தால் (ஸ்வரூப) நிரூபகாத3ந்யமான நிரூபிதஸ்வரூபவிஶேஷணமான ஸௌலப்4யமும் சொல்லப்படுகின்றனவென்று கருத்து. இவ்வர்த்த2ம் தே3ஶிகப4ாஷ்யத்திலும் தெளிவுபடுத்தப்பட்டிருக்கிறது. "**ஸௌலப்4யநிரூபகாத்**" என்றுள்ள பாட2ம் ப்ரகரணத்திற்கும் பொருந்தாது; பொருள்படவும் மாட்டாது. பன்னிரண்டாவது சூர்ணையில் "**தை3வீம் கு3ணமயீம் மாயாம்**" என்றவிடத்தில். "**தை3வீம்—த்வல்லீலார்த்த2ம்**" என்றிருப்பது பிழை. "**த்வல்லீலார்த்த2ாம்**" என்றிருக்கவேண்டும். "**ஏவம்பூ4தோऽஸி**" என்னும் பதினெட்டாவது சூர்ணையின் வ்யாக்2யாநம் "தத் கத3ா (**कदा**) இத்யத்ர ஆஹ—



ஏவம்பூ4தோஸீதி। கதே3தி த்வரா தவ யத2ா (**यथा**) ஸ்யாத் தத2ா (**तथा**) த்வமீத்3ருக3வஸ்தே2ாऽஸி" என்று காண்கிறது. "கத3ா" [எப்பொழுது] என்ற ப்ரஶ்நத்திற்கு அநுகு3ணமாக "**यदा-तदा**" [எப்பொழுதுதுண்டாயிற்றோ அப்போது] என்றிருக்கவேண்டுமேயொழிய "**यथा-तथा**" [எப்படியுண்டாயிற்றோ அப்படி] என்றிருக்க நியாயமில்லை. தெலுங்கு லிபியில் தவர்க்க3 த்3விதீய சதுர்த்த2ங்களுக்கிடையே ஒரு புள்ளியே பே4த3முள்ளதினாலேற்பட்ட அச்சுப்பிழையென்றே இதைக் கருதுகிறோம். இங்கும் மொழிபெயர்ப்பு உள்ள பாட2த்தைக்கொண்டே செய்யப்பட்டிருக்கிறது. மற்றோரிடம்:— 19-வது சூர்ணை அவதாரிகையில் "**ஶரீரபாதாவதி4கல்பகால: ஏவம்** விநோதே3ந நேய இத்யாஹ ஆத்4யாத்மிகேதி" என்று பாட2ம் காண்கிறது. "ஶரீரம் விடுமளவும் உள்ள **கல்பகாலம்** இப்படி ஸுக2மாகப் போக்கத்தக்கது என்று சொல்லுகிறார்" என்று மொழிபெயர்க்கப்பட்டது. ஶரீரம் விடுமளவுமுள்ள காலத்தைக் **கல்பகாலம்** என்று சொல்லுவதை எங்கும் கேட்டதில்லையாகையால் இதில் ஏதோ பாட2ப்பிறழ்விருக்கிறது என்று தெளிவாயிற்று. ஶ்ருதப்ரகாஶிகாசார்யருடைய திருவடிகளை தியானித்துக்கொண்டு சிறிது ஆலோசித்ததில் "**ஶரீரபாதாவதி4கால்பகால:**" என்பதே சரியான பாட2மென்று புலனாயிற்று. "ஶரீரம் விடுவதை அவதி4 (எல்லை) யாகக்கொண்ட அல்பகாலம் இப்படி விளையாட்டாகப் போக்கத்தக்கது" என்று பொருள். [ஶரீரபாதாவதி4க அல்பகால:] இச்சூர்ணையின் முடிவிலுள்ள "**கியாநயம் கால இதி ப4ாவ:**" என்ற ஸ்ரீஸூக்தியோடும் மிகப்பொருந்தியிருக்கும். வ்யாஸார்யருடைய வ்யாக்2யானத்தில் ஶோத4நம் செய்யக்கூடிய இடங்கள் மேலும் இருக்கக்கூடும். மஹான்கள் தெரிவித்தால் தலையல்லால் கைம்மாறிலேன். நம்முடைய பதிப்பில் நேர்ந்த சில அச்சுப்பிழைகளைக் கடைசியில் காட்டியிருக்கிறோம். திருத்திக்கொள்ள வேண்டும்.

தேன்போலே தித்திக்கும் இம்மூன்று கூத்யங்களுக்
அமைந்திருக்கும் இவ்விரு வியாக்கியானங்களும் பரு
பருகத் தெவிட்டாத ஆராவமுதமாய்த் திகழ்கின்ற
ஶ்ருதப்ரகாஶிகாசாரியர் ஒவ்வொரு பதங்களையெடுத்து
கொண்டு அதிஸங்க்ரஹமாகவும், அதிமதுரமாக
வியாக்கியானம் செய்திருக்குமழகு வாசாமகோசரம். பரம
காருணிகரான பெரியவாச்சான்பிள்ளை தமக்கே உரித்தான
ஸூத்ரம்போன்ற வாக்யங்களைக்கொண்டு, கூத்யத்தின்
ஒரு பதத்தையும் விடாமல் மிகவழகாக விவரித்திருப்பதைக்
காணுந்தோறும் நெஞ்சம் குழையாநிற்கிறது. ஒவ்வொரு
பதத்தின் வியாக்கியானத்தையும் ஸேவிக்கும்போதெல்
லாம், 'இவரல்லவோ வ்யாக்யாத்ரு ஸார்வபௌமர்;
இவரல்லவோ பரமரஸிகர்; இவரல்லவோ அபாரகருணா
ஸாகரர்; எம்பெருமானாரின் திருவுள்ளத்தையறிந்தவர்
இவரல்லது வேறொருவருமில்லை' என்றெல்லாமெண்ணி
நெஞ்சம் ஆநந்தக்கடலில் திளைக்கிறது.

இப்படிப்பட்ட ஆராவமுதன்ன வியாக்கியானங்களிலே
தோஷங்கூறவும், அவற்றைப் பழித்துக் கடுஞ்சொற்களைப்
பொழியவும் முற்பட்டார் நாம் மேலே எடுத்த கூத்யபாஷ்ய
மொழிபெயர்ப்புப் பண்டிதர். அவரெழுதியுள்ள விஷயங்
களுக்கு மட்டும் விடைகூறுவது நம் கடமையாகிறது.
நிஷ்பக்ஷபாதிகளான மஹான்கள் நடுநிலைமையிலிருந்து
ஆராயவேண்டும். "ஶ்ருதப்ரகாஶிகாசாரியர் வாத்ஸல்ய
ஶப்தத்திற்கு 'தோஷேஷு குணத்வபுத்தி:' என்று
அர்த்தம் சொல்லியிருப்பது ப்ரமாணம் யுக்தி முதலிய
வைகளுக்குப் பொருந்தாது" என்பது ஒரு தூஷணம்.
பொருந்தும்படியைக் காட்டுவோம். 'வாத்ஸல்யம்' என்னும்
பதத்திற்கு, 'வத்ஸம்' எனப்படும் கன்றினிடத்திலேயுள்ள
தோஷத்தையும் போக்யமாகக்கொண்டு நக்கிக்கொடுக்
கும் தாய்ப்பசுவின் அன்பு என்பது பொருள். "அற்ற
முரைக்கில் அடைந்தவர் பால் அம்புயைகோன் குற்ற



முணர்ந்திகழும் கொள்கையனே?—எற்றேதன், —கன்றி
னுடம்பில் வழுவன்றோ காதலிப்பது, அன்றதனை ஈன்றுகந்த
ஆ" என்று எம்பெருமானாருடைய சிஷ்யரான அருளாளப்
பெருமாள் எம்பெருமானார் அருளிச்செய்தார். "பொய்
கலவாது என் மெய் கலந்தானே" என்று நம்மாழ்வார்
தம்முடைய அழுக்குடம்பிலே எம்பெருமான் போக்ய
புத்திபண்ணியிருந்ததைக் கண்டு ஆழங்காற்பட்டார்.
"குன்றனைய குற்றஞ் செயினும் குணங்கொள்ளும்"
"செய்தகுற்றம் நற்றமாகவே கொள் ஞால நாதனே"
என்றார்கள் ஆழ்வார்கள். இவையெல்லாம் ப்ரமாணமல்
லவோ? எம்பெருமான் தோஷபோக்யனாகில் நாம்
தோஷங்களையே செய்யவேண்டிவருமாகையால் இது யுக்தி
யுக்தமன்றே என்னில்: அடியாருடைய தோஷங்களையும்
குணமாகக்கொள்ளும் வாத்ஸல்யம், ஸர்வேஶ்வரனுக்கு
ஆழ்வார்களைப்போன்ற சில வ்யக்திவிஶேஷங்களிலேயே
ஏற்படுமாகையாலும், வாத்ஸல்யத்திற்கு லக்ஷ்யம் எவ
னென்பதை ஸர்வேஶ்வரனேயறிவானாகையாலும் இவ்வதி
ப்ரஸங்கம் வாராது.

பெரியவாச்சான்பிள்ளை ஶரணாகதி கூத்யவ்யாக்யாந
ஆரம்பத்தில் "ஸ்ரீ பாஷ்யத்தில் குத்ருஷ்டிகளை நிரஸிப்
பதற்காக பக்தியே மோக்ஷஸாதநமென்று தாம் அருளி
யிருப்பதைக்கண்டு தமர்கள் அதுவே தம் ஸித்தாந்த
மென்று நினைக்கக்கூடாதென்று தாமறுதியிட்டுள்ள அர்த்
தம் ப்ரபத்தியென்று இக்கூத்யரூபேண வெளியிடுகிறார்"
என்னும் பொருளுள்ள ஸ்ரீஸூக்திகளை அருளியிருக்கிறார்.
இந்த ஸ்ரீஸூக்திகளையெடுத்து,—"இதனால் ஸ்ரீ பாஷ்யகார
ருக்கு விப்ரலம்பகத்வம் உண்டென்றதாகிறது" என்றும்,
"ஸ்ரீ பாஷ்யத்தில் ப்ரபத்தி சொல்லப்படவில்லையென்பது
ஸ்ரீ பாஷ்யத்தில் பரிசயமில்லாததைக் காரணமாகக்
கொண்டது" என்றும், "ஸ்ரீபாஷ்யத்தில் பக்திமாத்திரமும்,
ஸ்ரீகூத்யத்ரயத்தில் ப்ரபத்திமாத்திரமும் அருளிச்செய்யப்

பட்டிருக்கிறதென்று சொல்லுவது அவிசாரித ரமணீயம்'' என்றும் வாய்க்குவந்தபடியெல்லாம் கடுக்திகளைப் பொழிகிறார் நம் பண்டிதர். ஸ்ரீ வைகுண்ட2க3த்3ய வ்யாக்2யாந ப்ரவேஶத்தில் பெரியவாச்சான்பிள்ளை "ஸ்ரீபா4ஷ்யத்தில்... பா3ஹ்யகுத்3ருஷ்டிகளை நிரஸிக்கைக்காக ...... கர்மஜ்ஞாந ஸஹக்ருதையான ப4க்தியே உபாயம் என்று சொல்லுகிற இதுவே பொருளென்று ஸாதி4க்கவேண்டுகையாலே, ப்ரபத்தியும் உள்ளே ஸூசிதமாய்க் கிடக்கச் செய்தேயும், ப4க்தியிலே நோக்காக உபபாதி3த்தருளினார்'' என்று அருளியிருப்பதை அநுஸந்தி4ப்பவர்களுக்கு மேலேயெடுத்த அநுவாத3ாநர்ஹமான கடுஞ்சொற்கள் மிகவும் அநாவஶ்யகமானவையென்பதும், அஸ்தா2நேயென்பதும், பா4க3வதாபசாரபரமாவதி4யில் நிற்பவையென்பதும் புலனாகும். இந்த தூ3ஷணஸம்ப்4ரமத்திற்கு உண்மைக் காரணம் தே3ஶிக ஸ்ரீஸூக்தியொன்றின் பொருளுணரப்பெருமையே என்பதைச் சிறிது விளக்குவோம். "**ஆர்த்தோபச்ச2ந்த3நம் க3த்3யம் பா4ஷ்யந்து பரரஞ்ஜநம்। இத்யாவிலதி4யோऽப்யேவம் ப்ரஸீத3ந்து ப்ரமாணத:॥**'' ['ஆர்த்தர்களை உகப்பிப்பது க3த்3யம்; பா4ஷ்யம் பிறரை ரஞ்ஜிப்பிப்பது' என்று கலங்கிய பு3த்3தி4யை உடையவர்களும் இம்மாதிரியாக ப்ரமாணத்தைக்கொண்டு தெளிவார்களாக] என்பது ஸ்ரீ தே3ஶிகருடைய க3த்3யபா4ஷ்யத்திலேயுள்ளதொரு ஶ்லோகம். இந்த ஶ்லோகத்திலுள்ள பா4ஷ்யஶப்3த3த்தை ஸ்ரீபா4ஷ்யபரமாகக்கொண்டு இந்த ஶ்லோகம் பெரியவாச்சான் பிள்ளையை தூ3ஷிப்பதற்காகத் தோன்றியது என்னும் நினைவினாலேயே மேலே எடுத்த கடுஞ்சொற்களைப் பொழிந்துள்ளார் பண்டிதர் என்பது தெளிவு. உண்மையில் இந்த ஶ்லோகத்தில் பா4ஷ்யபத3ம் கீ3தாபா4ஷ்யத்தையே குறிக்குமென்பதையும், இந்த ஶ்லோகம் பெரியவாச்சான் பிள்ளையை நோக்கி அவதரித்ததன்றென்பதையும் மத்4யஸ்த2ர்கள் உகக்கும்படி இனி நிரூபிப்போம்.



"**பா4ஷ்யம் து பரரஞ்ஜநம் இத்யாவிலதி4ய:**'' [பா4ஷ்யமோவென்னில்: பிறரை **உகப்பிப்பதற்காக** ஏற்பட்டது என்று கலங்கிய பு3த்3தி4யை உடையவர்கள்] என்பது தே3ஶிக ஸூக்தி. பெரியவாச்சான்பிள்ளையோவெனில் பா4ஷ்யம் குத்3ருஷ்டிகளை நிரஸிப்பது என்றே பலகால் பேசியுள்ளார். இதிலிருந்தே தே3ஶிகன் பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்தியை நோக்கி இங்கெழுதவில்லை என்று விளங்கும். மேலும் "ஆர்த்தோபச்ச2ந்த3நம்'' என்னும் இந்த ஶ்லோகத்திற்கு முன்னால், "**न च प्रपत्तिस्वातन्त्र्ये भाष्यविरोधः। तथा हि...उपासनस्येव प्रपदनस्यापि सर्वाभिमतसाधनत्वावगतेः तत्र चरमश्लोकविधेयं प्रकृतोपायविरोधिपापनिवर्तनरूपोदाहरणविशेषे प्रदर्शयामास। इह तु साध्यान्तरसाधनान्तररहितमन्त्रविवरणप्रवृत्तत्वात् प्राप्तिविरोधिनिरसनार्थतयोदाहरति**'' [ப்ரபத்தியானது, ஸ்வதந்த்ரமான மோக்ஷோபாயம் என்பதில் (கீ3தா) பா4ஷ்யவிரோத4மில்லை. **அதாவது:—** உபாஸனத்தைப்போலே ப்ரபத்தியும் எல்லாப் ப2லன்களுக்கும் ஸாத4நமாயிருப்பதென்று (ப்ரமாணங்களிலிருந்து) அறியப்படுவதால் அந்த **கீ3தாபா4ஷ்யத்தில்** சரமஶ்லோகத்தில் விதி4க்கப்படும் ப்ரபத்தியைக் கீழ்ச்சொல்லப்பட்ட ப4க்தியோக3 விரோதி4பாப நிவர்த்தனமாகிற ஒரு உதா3ஹரணத்திலே காட்டினார். இங்கு க3த்3யத்திலோவென்னில், மற்ற ப்ராப்யப்ராபகங்களற்ற த்3வயமந்த்ரத்தை விவரிக்க ஆரம்பி4த்ததால் மோக்ஷப்ராப்தி விரோதி4 நிரஸனத்திற்காக எடுத்துக்காட்டுகிறார்] என்னும் பங்க்திகள் உள்ளன. இங்கு 'பா4ஷ்ய' ஶப்3த3த்தினால் **கீ3தாபா4ஷ்யத்தையே** குறித்திருப்பதை அநுஸரித்து, அடுத்துள்ள "**பா4ஷ்யந்து பரரஞ்ஜநம்**'' என்னும் ஶ்லோகத்திலுள்ள பா4ஷ்யஶப்3த3மும் கீ3தாபா4ஷ்யத்தையே குறிக்கிறதென்று நன்குணரலாம். ஸ்ரீ பா4ஷ்யத்தைப்பற்றி இந்த ப்ரகரணத்தில் பேச்சேயில்லை.

இனி, "ஆர்த்தோபச்ச2ந்த3நம்'' என்னும் ஶ்லோகம் எதற்காக அவதரித்தது என்பதை உரைப்போம். எம்

பெருமானார் கீ3தாசரமஶ்லோக ப4ாஷ்யத்தில் ப்ரபத்தியானது ப4க்தியோக3த்திற்கு அங்க3மாயிருப்பது என்னும் ஒரு நிர்வாஹத்தை அருளியிருக்கிறார். க3த்3யத்திலோவென்னில் அதை ஸ்வதந்த்ரஸாத4னமென்றே நிர்வஹித்தருளியிருக்கிறார். இதைக் கண்ணுற்ற சிலர் "கால விளம்ப3ம் பொருத ஆர்த்தர்களை த்ருப்திசெய்வதற்காக ஏற்பட்டது க3த்3யம்; கீ3தாப4ாஷ்யமே ப4ாஷ்யகாரஸித்3தா4ந்தம்" என்றும், மற்றும் சிலர் "கீ3தாப4ாஷ்யம் கால விளம்ப3த்தைப் பொறுக்கக்கூடிய ப4க்தியோக3நிஷ்டர்களை ரஞ்ஜிப்பிப்பதற்காக ஏற்பட்டது. க3த்3யமே ப4ாஷ்யகார ஸித்3தா4ந்தம்" என்றும் சொல்லியிருக்கிறார்கள். இதைக் க2ண்டி3ப்பதற்காகவே "ஆர்த்தோபச்ச2ந்த3நம்" என்னும் ஶ்லோகத்தை இட்டிருக்கிறார் தேசிகன்; ஆர்த்தர்களை ஏமாற்றுவதற்கு க3த்3யமருளினாரென்றோ, பிறரை ரஞ்ஜிப்பிப்பதற்காக ப4ாஷ்யகாரர் கீ3தாப4ாஷ்யத்தில் அங்க3ப்ரபத்தி நிர்வாஹத்தை அருளினார் என்றோ சொல்ல வேண்டியதில்லை; ப்ரபத்தி ஸர்வப2ல ஸாத4நமாயிருப்பது என்பதை ஒவ்வொரு உதா3ஹரண விஶேஷத்தாலே காட்டுவதற்காக அந்தந்த நிர்வாஹத்தை அருளியிருக்கிறார் என்றே கொள்ளலாம் என்று தே3ஶிகன் திருவுள்ளம். ஆர்த்தஶப்3த3த்தால் விளம்ப3ாக்ஷமரான ப்ரபன்னர்களையும், பரஶப்3த3த்தால் ஆர்த்தவ்யதிரிக்தராய் விளம்ப3க்ஷமரான ஸாத4நாந்தரநிஷ்டர்களையும் குறிப்பிடுகிறார் என்பது திண்ணம். பெரியவாச்சான்பிள்ளை கருதிய புறச்சமயிகளை இங்கு பரஶப்3த3த்தால் குறித்தார் என்று நினைக்க இடமே இல்லை. 'ரஞ்ஜநம்' என்னும் வார்த்தை புறச்சமயிகளைக் கொண்டால் ஒட்டவே ஒட்டாது. ஆக, இவ்வளவால் பெரியவாச்சான்பிள்ளையை தூ3ஷிப்பதற்காக தே3ஶிகன் "ஆர்த்தோபச்ச2ந்த3நம்" என்னும் ஶ்லோகத்தை இயற்றவில்லை என்று ப்ரகரணம், யுக்தி முதானவற்றைக்கொண்டு நிரூபிக்கப்பட்டது. இவ்வளவுக்கும் மேலே, அஹோபி3ல மட2த்தின் இரண்டாவது பட்டத்தையலங்கரித்த ஸ்ரீமந்



நாராயணஸ்வாமி புருஷகாரமீமாம்ஸையில் அருளியிருக்கும் பின்வரும் ஶ்லோகங்களிலிருந்தும் இது தெளிவாகிறது:—

"ப்ராத4ாந்யாங்க3த்வபரயோர் க3த்3யகீ3தாந்தப4ாஷ்யயோ: ।
த்3வயோரந்யதரத் ப3ாத்4யம் விரோதே4ா ஹி ஸ்பு2டஸ் தத: ॥
ஆர்த்தோபச்ச2ந்த3நம் க3த்3யம் கேசித3ாஹுர் விபஶ்சித: ।
கீ3தாந்தப4ாஷ்யமந்யே து வத3ந்தி பரரஞ்ஜநம் ॥
தாத்பர்யார்த்த2ாவிரோதே4ந நாத்ரைகேநாந்யப3ாத4நம் ।
ப்ரமாணத3ார்ட்4யாத3த்ரைவம் க3த்3யப4ாஷ்யோக்தஸங்க்3ரஹ: ॥
ஆர்த்தோபச்ச2ந்த3நம் க3த்3யம் ப4ாஷ்யந்து பரரஞ்ஜநம் ।
இத்யாவிலதி4யோऽப்யேவம் ப்ரஸீதே3யு: ப்ரமாணத: ॥

[(ப்ரபத்தி) ப்ரத4ாநோபாயமென்றும், அங்க3மென்றும் (முறையே) சொல்லும் க3த்3யம், கீ3தாசரமஶ்லோகப4ாஷ்யம் என்னும் இரண்டினுள் ஒன்றைத் தள்ளியேயாகவேண்டும்; (அவைகளுக்குள்) விரோத4ம் ஸ்பஷ்டமாக உள்ளதன்றோ; இக்காரணத்தால் ஆர்த்தர்களை த்ருப்தி செய்வதற்காக வந்த க3த்3யத்தையே தள்ளவேண்டுமென்று சில வித்3வான்கள் சொன்னார்கள். மற்றும் சிலர் ஸாத4நாந்தர நிஷ்டர்களை ரஞ்ஜிப்பிப்பதற்காக ஏற்பட்ட கீ3தாப4ாஷ்யத்தையே தள்ளவேண்டுமென்று சொன்னார்கள். (நாம் சொல்லுவது யாதெனில்; இரண்டுக்கும் தாத்பர்யார்த்த2த்தில் விரோத4மில்லையாகையால் ஒன்றைக்கொண்டு ஒன்றைத் தள்ளவேண்டாம். (ப்ரபத்தி ஸர்வப2லஸாத4னமென்பதில்) ப்ரமாணம் த்3ருட4மாயுள்ளதாகையாலே" என்று இம்மாதிரியாக க3த்3யப4ாஷ்யத்திலே "ஆர்த்தோபச்ச2ந்த3நம்" என்னும் ஶ்லோகத்திலே ஸங்க்3ரஹிக்கப்பட்டது.] என்பவை புருஷகாரமீமாம்ஸா ஸ்ரீஸூக்திகள். இவைகளிலிருந்து தே3சிகன் க்ருஷ்ணஸூரியின் க3த்3யவ்யாக்2யானஸூக்திகளைக் க2ண்டி3ப்பதற்காக "ஆர்த்தோபச்ச2ந்த3நம" என்னும் ஶ்லோகத்தை இயற்றவில்லையென்பது, கையிலங்கு நெல்லிக்கனியாகவும், வெள்ளிடைமலையாகவும் விளங்குகிறது.

“**தஸ்மாத் ப்ரணம்ய ப்ரணிதா4ய காயம்**” என்கிற ஶ்லோக அவதாரிகையில், “‘கீழ் ஶரணம் புக்கவதுக்கு க்ஷாமணம் பண்ணுகிறார்’ என்று தொடங்கிப் பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்2யாநம் செய்திருப்பது ஸாஹஸம்” என்றெழுதுகிறார். அப்படியாகில், “எனதாவி தந்தொழிந்தேன் இனி மீள்வதென்பதுண்டே” என்று ஆத்மஸமர்ப்பணம் செய்த நம்மாழ்வார், அடுத்த அடியில் “எனதாவி யாவியும் நீ பொழிலேழுமுண்ட எந்தாய்! எனதாவி யார் யானார் தந்த நீ கொண்டாக்கினையே” என்று அதற்கு அநுஶயித்திருப்பதும், “**அஹமத்3யைவ மயா ஸமர்ப்பித:**” என்ற ஆளவந்தார், அடுத்த ஶ்லோகத்தில் “**அத2வா கிந்நு ஸமர்ப்பயாமி தே**” என்று அனுஸந்தி4த்திருப்பதும், “இதுக்கு மேல் **மம நாத2 யத3ஸ்தி** என்கிற ஶ்லோகத்திலே இஸ் ஸமர்ப்பணத்தைப்பற்ற அநுஶயம் பண்ணிற்றும்” என்று ரஹஸ்யத்ரயஸாரம் ஸாங்க3ப்ரபத3நாதி4காரத்தில் தே3ஶிகன் அருளியிருப்பதும் ஸாஹஸமாகவேண்டிவரும். “**கதா3஽ஹமைகாந்திக நித்ய கிங்கர: ப்ரஹர்ஷயிஷ்யாமி ஸநாத2ஜீவித:**” என்று கைங்கர்யப்ரார்த்த2னை செய்த ஆளவந்தார் அடுத்த ஶ்லோகத்தில் “**தி4க்3ஶுசிமவிநீதம்**” என்று தாம் செய்த இச்செய்கைக்குத் தம்மையே நிந்தி3த்துக் கொண்டார். ஸ்ரீதேசிகனும் ஶரணாக3தி தீ3பிகையென்னும் தீ3பப்ரகாஶ ஸ்தோத்திரத்திலே “**இத்த2ம் த்வதே3கஶரணைரநகை4ரவாப்யே த்வத்கிங்கரத்வ விப4வே ஸ்ப்ருஹயா஽பராத்4யந்**” என்று ப4க3வத் கைங்கர்யத்தை ஆசைப்படுவது மஹாபராத4ம் என்றருளிச்செய்கிறார். இவையெல்லாம் ரஸிகக்ருத்யமன்றோ. அப்படியே ஸம்ஸாரப4யத்தால் ஆத்மாவை ஸமர்ப்பிக்கையும், ஸ்வரூபத்தை அநுஸந்தி4த்தவுடன் அதற்கு அநுஶயிக்கையும் ரஸிகக்ருதயமேயாகும். இவற்றிலே குற்றம் காண்பார் அரஸிகர்களேயாவர். “**அரஸிகேஷு கவித்வ நிவேத3நம் ஶிரஸி மாலிக2 மாலிக2 மாலிக2**” என்றது நினைவுக்கு வருகிறது.



கடைசியாக, “‘**ப்ரிய: ப்ரியாயார்ஹஸி தே3வ ஸோடு4ம்**’ என்கிறவிடத்து வ்யாக்2யாநத்தில் ஸ்ரீப4ாஷ்யகாரருடைய கீ3தாப4ாஷ்ய வ்யாக்2யாநக்ரமத்தை அநாத3ரித்து ஶங்கர கீ3தாப4ாஷ்யத்தில் உள்ளபடி ‘ப்ரிய: ப்ரியாயா:’ என்று பத3ம் பிரித்து ‘ஸந்தி4ரார்ஷ:’ என்று வ்யாக்2யாநம் செய்திருக்கிறார் ஆ ச் சா ன் பி ள் ளை” என்னும் தூ3ஷணம். ‘அர்த்த2 ஸ்வாரஸ்யமுண்டாமிடத்தில் சிறிது ஶப்3த3ாஸ்வாரஸ்யத்தையும் ஸஹிக்கலாம்’ என்னும் மீமாம்ஸாந்யாயத்தை அநுஸரித்தே ஆச்சான்பிள்ளை இப்படி வ்யாக்2யானமருளினார். இங்கு அர்த்த2ஸ்வாரஸ்யமென்னென்னில்:— இதற்கு முன்னுள்ள ஶ்லோகங்களில் “**பிதரம் மாதரம் தா3ராந்**” என்றும், “**த்வமேவ மாதா ச பிதா த்வமேவ**” என்றும், “**பிதா஽ஸி லோகஸ்ய**” என்றும் ஸகலவித4மான ப3ந்து4வும் நாராயணனே என்று சொல்லுகையாலே, “**தஸ்மாத் ப்ரணம்ய**” என்னும் அடுத்த ஶ்லோகத்திலும் பித்ருபுத்ர, மித்ரஸம்ப3ந்த4த்துடன், பதிபத்நீஸம்ப3ந்த4த்தையும் அநுஸந்தி4ப்பது ஸ்வரஸமாயிருக்கும். நாயகநாயகீ ப4ாவத்திலேயே ஊன்றிநிற்கும் ஆழ்வார்கள் வழிவந்த எம்பெருமானார் திருவுள்ளத்திற்கும் பொருந்தியிருக்கும். ஆகையால் அப்படி வ்யாக்2யாநம் செய்யப்பட்டது. மேலே சொன்ன ப்ரகரணஸ்வாரஸ்யம் கீ3தையிலில்லையாகையாலும், ‘ஹே க்ருஷ்ண ஹே யாத3வ’ என்னும் அர்ஜுநன் நாயகநாயகீப4ாவமுடையனல்லனாகையாலும் எம்பெருமானார் வேறு வித4மாக ப4ாஷ்யமிட்டார். ஆகையால் விரோத4மில்லை. நிற்க; இக்க3த்3யத்ரய தத்3வ்யாக்2யாநங்களை ஸேவித்து எம்பெருமானார் க்ருபைக்கு விஷயமாகும்படி ஸ்ரீவைஷ்ணவ ஸமூஹத்தை ப்ரார்த்தி2க்கிறேன்.

விஜய ஞூ<br>சித்திரையில்<br>செய்யதிருவாதிரைநாள். }

இங்ஙனம்,

**கி. ஸ்ரீநிவாஸ அய்யங்கார்.**

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# இரண்டாவது பதிப்பின் முகவுரை

இந்த அத்3பு4தத்தி3வ்யக்3ரந்த2மானது ராக்ஷஸ-ஹூ பங்குனி உத்தரத்தன்று இரண்டாவது பதிப்பைக் காண்கிறது. இதில் முதல் பதிப்பில் இல்லாத — தமிழ் அக்ஷரங்களை உச்சரிப்பதற்கு ஸௌகர்யமாக 2, 3, 4 என்னும் குறியிடுதல் முதலான சில பரிஷ்காரங்கள் செய்யப்பட்டிருக்கின்றன. கீழே அளிக்கப்பட்டிருக்கும் பிழை திருத்தங்களைச் செய்துகொண்டு க்3ரந்த2த்தை ஸேவிக்கும்படி ப்ரார்த்திக்கிறேன்.

தாஸன்,

ராக்ஷஸ-ஹூ பங்குனி உத்தரம் 12—4—76 } **ஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்,**
'ஸுத3ர்ஶனம்' ஆசிரியர்.

---

## பிழைதிருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 1 | கடைசிவரி | முக3த்தாலே | முக2த்தாலே |
| 2 | 2 | எற்ற | ஏற்ற |
| 5 | 17 | समाश्रयणं श्रीमच्छब्द | समाश्रयणसिद्धये पुरुषकार - भूतवात्सल्यनिर्भरलक्ष्मीसमा- श्रयणं श्रीमच्छब्द |
| 6 | 3 | पौष्कल्परौ | पौष्कल्यपरौ |
| 11 | 4 | 32 | 31 |
| 16 | 21 | मभिप्रेतम् । अविरता | मभिप्रेतम् । शरणवरणानर्हे शरण्यत्वधीर्हि अयथावस्थिता स्यात् । अविरता |
| 18 | 11 | अनुकूलपरौ | अनुकूलत्वपरौ |
| 50 | 9 | विहस्येतेति | विहन्येतेति |

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



பரமகாருணிகரான பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்த

# சரணாக3திக3த்3ய வ்யாக்2யாநம்

ஸ்ரீமத்க்ருஷ்ணஸமாஹ்வாய நமோ யாமுநஸூநவே।
யத்கடாக்ஷைகலக்ஷ்யாணாம் ஸுலப4: ஸ்ரீத4ரஸ்ஸதா3॥

ப்ரவேஶம்

ஸ்ரீபா4ஷ்யத்தில்—1. "तत्त्वमसि" (தத்த்வமஸி) இத்யாதி3 வாக்யஜந்யஜ்ஞாநமே மோக்ஷஸாத4நமென்றும், கர்மஜ்ஞாந ஸமுச்சயமே மோக்ஷஸாத4நமென்றும் சொல்லுகிற குத்3ருஷ்டிகளை நிரஸிக்கைக்காக, கர்மாங்க3கமாய், வேத3ந த்4யாநோபாஸநாதி3ஶப்3த3வாச்யமாய், ப4க்திரூபாபந்நமான உபாஸநாத்மகஜ்ஞானமே வேதா3ந்தப்ரதிபாத்3யமான மோக்ஷஸாத4னமென்று இவர் நிஶ்சயித்து அருளிச்செய்கையாலே இவர் மோக்ஷஸாத4நமாக அறுதியிட்ட அர்த்த2ம் இதுவேயென்றுகொண்டு தம்முடைய ருசிபரிக்3ருஹீதமான அர்த்த2த்தையே விஶ்வஸித்திருக்கும் ஸாத்விகர் இத்தையே விஶ்வஸித்திருக்கக்கூடுமென்று பார்த்தருளி, ஆசார்யருசிபரிக்3ருஹீதமுமாய், தமக்குத் தஞ்சமாகத் தாம் அறுதியிட்டிருக்கும் அர்த்த2ம் ப்ரபத்தியென்னுமிடத்தை இக்க3த்3யரூபேண வெளியிட்டருளுகிறார். ஆனால், இப்ரபத்திதன்னையேகொண்டு குத்3ருஷ்டி நிரஸனம் பண்ணாதொழிவானென்னென்னில்: ப்3ராஹ்மணன் சண்டா3ளனுக்கு வேத3த்தை உபதே3ஶித்தாற்போலே தூ3ரஸ்த2ரானவர்களுக்குப் பரமரஹஸ்யமான இவ்வர்த்த2த்தை வெளியிடவொண்ணாதென்று பார்த்து, அவர்களிழிந்த ஶாஸ்த்ரமுக2த்தாலேயே அவர்களை நிரஸித்து, ஶாஸ்த்ரதாத்பர்யமான ஸ்வஸித்3தா4ந்தத்தை இம்முக2த்தாலே வெளியிடுகிறார்.

வேதா3ந்தங்களிலே மஹாபத2(पथ)மாகச் சொல்லுகிற ப4க்தியைக் காட்டில் இப்ரபத்திக்கு ஏற்றமென்னென்னில்: அது அதி4க்ருதாதி4காரமுமாய், து3ஷ்கரமுமாய், விளம்ப்3ய ப2லப்ரத3முமாய், ப்ரமாத3ஸம்ப4ாவனையுள்ளதுமாய், ஸாத்4யமுமாய், ஸ்வரூபாநநுரூபமுமாய், ப்ராப்யத்துக்கு விஸத்3ருஶமுமாயிருக்கும். இதுவோவென்றால், அதுக்கு எதிர்த்தட்டாம்படி ஸர்வாதி4காரமுமாய் ஸுகரமுமாய், அவிளம்ப்3ய ப2லப்ரத3முமாய், ப்ரமாத3ஸம்ப4ாவனையுமின்றிக்கே ஸித்3த4முமாய், ஸ்வரூபாநுரூபமுமாய், ப்ராப்யத்துக்கு ஸத்3ருஶமுமாயிருக்கும்.

ஆனால் இவ்வுபாயம் வேதா3ந்தஸித்3த4மோ அன்றோ என்னில்: யாஜ்ஞிகீயமான உபநிஷத்திலே 2. **"सत्यं तपो दमः शमो दानं धर्मः प्रजननमग्नयोऽग्निहोत्रं यज्ञो मानसं"** (**ஸத்யம் தபோ த3ம: ஶமோ தா3நம் த4ர்ம: ப்ரஜநநமக்3நயோऽக்3நிஹோத்ரம் யஜ்ஞோ மாநஸம்**) என்று ஒன்றுக்கொன்று உத்க்ருஷ்டமாகச் சொல்லிப்போந்து எல்லாவற்றுக்கும் மேலாக 3. **"तस्मान्न्यासमेषां तपसामतिरिक्तमाहुः"** (**தஸ்மாந்ந்யாஸமேஷாம் தபஸாமதிரிக்தமாஹு:**) என்று, "தபஸ்ஸுக்களில் வைத்துக்கொண்டு அதிரிக்தமான தபஸ்ஸு ப்ரபத்தி" என்று இதினுடைய உத்கர்ஷம் சொல்லிற்று. அதுக்குமேலே 4. **"धर्मज्ञसमयः प्रमाणं वेदाश्च"** (**த4ர்மஜ்ஞஸமய: ப்ரமாணம் வேதா3ஶ்ச**) என்று ப்ரப3லப்ரமாணமான ஆசார்ய ருசிபரிக்3ருஹீதத்வமாகிற ஏற்றமும் இதுக்குண்டு. 4. "**வேதா3ஶ்ச**" என்று வேத3மும் அப்ரதா4நப்ரமாணமாம் படியிறே வைதி3கபரிக்3ருஹீதத்வத்தின் ப்ராமாண்யாதிஶயம் இருப்பது. அளவுடையாராயிருப்பார்க்கு இதுவே போருமாயிற்று ப்ராமாண்யத்துக்கு. இதுதான் அளவில்லாதார்க்கு வேதா3ந்த ஸித்3த4முமாயிருக்கும்.

ஆக, இப்படி வேதா3ந்த ஸித்3த4முமாய், ஸ்வரூப ப்ராப்தமுமாய், ஆசார்யருசி பரிக்3ருஹீதமுமாய், ஶரண்ய ஹ்ருத3யாநுஸாரியுமாயிருக்கையாலே அதிலும் இதுவே அநுஷ்டே2யமென்னுமிடத்தைத் தம்மை விஶ்வஸித்திருக்



கும் ஸாத்விகர் இழக்கவொண்ணாதென்று பார்த்து, தாமும் பெரியபெருமாளும் அறிந்ததாக அநுஸந்தி4த்துவிட அமைந்திருக்க, தம்முடைய பரமக்ருபையாலே க3த்3ய முகே2ந வெளியிடுகிறார்.

இதுதான் அவதரித்தபடி எங்ஙனேயென்னில்: ஒரு திருவுத்தரத்திருநாளிலே, பெருமாளும் நாச்சியாருமாகப் புறப்பட்டு ஏறியருளாநிற்குமளவிலே எம்பெருமானார் எழுந்தருளித் திருவடி தொழாநின்றார். அஸ்யாம் அவஸ்த2ாயாம், திருவுள்ளத்திலே ஸம்ஸாரபீ4தி நடையாட, திருவடிகளிலே விழுந்து ஶரணம் புக்கவதுக்குப் பாசுரமிட்டபடி. முதலிலே ஸம்ஸாரப4யபீ4தராய்க் கொண்டு பெரியநம்பிஸ்ரீபாத3த்தை ஆஶ்ரயித்தபோதே பெரிய பெருமாள் திருவடிகளிலே ஶரணம்புக்கிலரோ? 5. **"सकृदेव"** (**ஸக்ருதே3வ**) என்றன்றோ ஶரண்ய ஹ்ருத3யமிருப்பது. ஆனபின்பு, 6. **"तत्तस्य सदृशं भवेत्"** (**தத் தஸ்ய ஸத்3ருஶம் ப4வேத்**) என்றும், † "உன்னாலல்லால் யாவராலும் ஒன்றும் குறைவேண்டேன்" என்றும், / "களைவாய் துன்பம் களையாதொழிவாய் களைகண் மற்றிலேன்" என்றும் சொல்லுகிறபடியே 'உடையவன் உடைமையைச் செய்தபடி செய்கிறான்' என்று ஆறியிருக்க ப்ராப்தமாயிருக்கத் திரியட்டும் இப்போது ஶரணம்புகவேண்டுவானென்னென்னில்: அவ்வளவு ஆறியிருக்கமாட்டாத தம் ப்ராப்யத்வரையாலே ஶரணம் புகுகிறார். இதிறே ஆழ்வார்களுக்கும் ரீதி. அவர்களை அடியொற்றுகிற ஆசார்யர்களுக்கும் அதுவே ரீதியாமத்தனையன்றோ. ஸம்ஸாரப4யமும் ப்ராப்யருசியும் கனக்கக் கனக்க, ஒருகால் ஶரணம் புக்காப்போலே ஒன்பதின்கால் ஶரணம் புகுமித்தனையிறே அவர்கள். ஆக, ஸம்ஸாரநிவ்ருத்திபூர்வமாகக் கைங்கர்யஸித்3தி4க்குப் பெரியபெருமாள் திருவடிகளிலே ஶரணம் புகுகிறார்.

**ப்ரவேஶம் முற்றிற்று.**

---

† திருவாய் 5-8-3. / திருவாய் 5-8-8.

முதல் சூர்ணை அவதாரிகை:— இதுதான் த்3வயத்துக்கு வ்யாக்2யானமாயிருக்கிறது. இதில் முதல் சூர்ணையிலே— ஶரணம் புகுவார்க்கு ஶரணம்புக யோக்3யதையுள்ளது கண்ணழிவற்ற உபேயருசியும் உபாயாத்4யவஸாயமும் உண்டாளுலாகையாலே தத்ஸித்3த்4யர்த்த2மாகப் பிராட்டி திருவடிகளிலே ஶரணம் புகுகிறுர். அதுவென்? 7. "सकलफलप्रदो हि विष्णुः" (ஸகலப2லப்ரதே3ா ஹி விஷ்ணு:) என்று ஸர்வாபேக்ஷகளுக்கும் ப2லப்ரத3ன் அவனன்றே? ஆன பின்பு, அந்த யோக்3யதாஸித்3தி4க்குமாக அவன் திருவடிகளிலே ஶரணம்புகத்தட்டென்? என்னில்: 8. "सुहृदं सर्वभूतानां" (ஸுஹ்ருத3ம் ஸர்வபூ4தாநாம்) என்கிறபடியே, ஸர்வபூ4த ஸுஹ்ருத்தாயிருக்க, ஈஶ்வரனையும் நீரிலே நெருப்பு கிளருமாபோலே 9. "क्षिपामि" (க்ஷிபாமி), 10. "न क्षमामि" (ந க்ஷமாமி) என்ன அபராத4ங்களைப் பண்ணிப்போந்த நாம் நேர்கொடு நேரே நின்று ஶரணம் புக்கால், பூர்வவ்ருத்தத்துக்கு ஸ்மாரகமாவுதோமென்று தம்மையஞ்சி, தம் திறத்தில் ஈஶ்வரனுக்குண்டான சீற்றத்தை ஆற்றுமவளுமாய், ஸ்த்ரீத்வப்ரயுக்தமான மார்த்த3வத்தை உடையளுமாய், மாத்ருத்வப்ரயுக்தமான குடல் துடக்கை உடையளுமாய், இவர்கள் சொல்லும் வார்த்தையைச் செவி தாழ்த்துக் கேட்குமவளுமாய், அவனைத் தன் போ4க்3யதையாலே துவக்கிக் கேட்பிக்குமவளுமாய், அதுக்குமேலே ஸ்தநந்த4யப்ரஜைக்குத் தாய்கீழே ஒதுங்குகை ப்ராப்தமானவோபாதி ஸ்வரூபப்ராப்தையுமாயிருக்கையாலே, பிராட்டி திருவடிகளிலே ஶரணம் புகுகிறுர். நெடுங்காலம் விஷயப்ரவணளுய்ப்போந்த ப்ரஜை, நிவ்ருத்தனுனவன்று, பிதாவின்பக்கல் நேர்முகம் பார்த்துச் சொல்லுகை அரிதாய், மாதாவின் பக்கல் சொல்லுகை எளிதாயிருக்குமிறே. ப்ரத2மத்தில் ஆஶ்ரயிக்கைக்குங்கூட இருய்த்த இவர், இவளை ஆஶ்ரயித்தவனந்தரம், பண்ணின அபராத4ங்களை "க்ஷமஸ்வ" என்றுரிறே அந்த:புரபரிகரமாகையாலே.

॥ श्रीः ॥

॥ श्रीमते रामानुजाय नमः ॥

श्रीभगवद्रामानुजमुनिभिरनुगृहीते गद्यत्रये

## ॥ शरणागतिगद्यम् ॥

यो नित्यमच्युतपदाम्बुजयुग्मरुक्मव्यामोहतस्तदितराणि तृणाय मेने।
अस्मद्गुरोर्भगवतोऽस्य दयैकसिन्धोः रामानुजस्य चरणौ शरणं प्रपद्ये॥

वन्दे वेदान्तकर्पूरचामीकरकरण्डकम्।
रामानुजार्यमार्याणां चूडामणिमहर्निशम्॥

---

॥ श्रीः ॥

श्रीमत्सुदर्शनभट्टार्यप्रणीत श्रुतप्रकाशिकाभिधानं

## ॥ शरणागतिगद्यव्याख्यानम् ॥

यतीन्द्रकृतभाष्यार्था यद्व्याख्यानेन दर्शिताः।
वरं सुदर्शनार्यं तं वन्दे कूरकुलाधिपम्॥
वरदं द्विरदाद्रीशं श्रीनिधिं करुणानिधिम्।
शरण्यं शरणं यामि प्रणतार्तिहरं हरिम्॥

उपायोपेयपरं द्वयं विशदीक्रियते। तत्र प्रतापोष्मलपितृत्वदुरासदभगवत्समाश्रयणं श्रीमच्छब्दविवरणमुखेनाभिधीयते॥

यद्वा श्रियं प्रपद्य तत्सन्निधौ मूलमन्त्रेण स्वरूपानुरूपपुरुषार्थप्रार्थनं तदुपायप्रार्थनापर्यन्तं कृत्वा, तदनुज्ञया द्वयमनुसन्धीयत इति पूर्वाचार्यानुसन्धानमनुसरन् प्रथमं श्रियं प्रपद्यते भगवदिति॥

---

வ்யா:— (ப4க3வந்நாராயண) ப4க3வச்ச2ப்3த3த்தாலே, 11. "विना हेयैर्गुणादिभिः" (விநா ஹேயைர் கு3ணதி3பி4:) என்கிறபடியே ஹேயஸம்ப3ந்த4ரஹித பூர்ணஷாட்3கு3ண்யத்தைச் சொல்லுகிறது. 11. "ज्ञानशक्तिबलैश्वर्यवीर्यतेजांस्यशेषतः। भगवच्छब्दवाच्यानि विना हेयैर्गुणादिभिः॥" (ஜ்ஞாநஶக்தி ப3லைஶ்வர்யவீர்யதேஜாம்ஸ்யஶேஷத: । ப4க3வச்ச2ப்3த3வாச்யாநி விநா ஹேயைர் கு3ணதி3பி4: ॥) என்னக்கடவதிறே.

१. भगवन्नारायणाभिमतानुरूप-

1. ப$_4$க$_3$வந்நாராயணாபி$_4$மதாநுரூப-

भगवन्नारायणशब्दौ गुणविभूतिपौष्कल्यपरौ * द्विषट्काष्टार्णयोरपि तत्साहित्यज्ञानपरौ च। अनुरूपेऽनभिमतिरननुरूपे चाभिमतिश्च दृश्यत इति तद्व्युदासाय अभिमतानुरूपशब्दौ।

இத்தால் பயிருக்கு நீர்நிலைபோலே ஸர்வாத்மாக்களுக்குங் கூட உஜ்ஜீவநஹேதுவான கு$_3$ணபூர்ணனுமாய், பிறருடைய தே$_3$ாஷம் தட்டாதபடியான ஹேயராஹித்யத்தையுமுடையவன் என்கிறது. (நாராயண) ப$_4$க$_3$வச்ச$_2$ப்$_3$த$_3$த்திலே ஸர்வமுமில்லையோ? இனி நாராயணஶப்$_3$த$_3$ாபேக்ஷை உண்டோ? என்னில்: 12. "अन्यत्र ह्युपचारतः" (அந்யத்ர ஹ்யுபசாரத:) என்கிறபடியே ப$_4$க$_3$வச்ச$_2$ப்$_3$த$_3$த்துக்கும் ப்$_3$ரஹ்மஶப்$_3$த$_3$த்தோபாதி வ்யக்த்யந்தரங்களிலே ஔபசாரிகமாகவாகிலும் ப்ரயோக$_3$முண்டு. அதுவுமின்றியே அநந்யபரமான நாராயணாநுவாகஸித்$_3$த$_4$மாய், யோக$_3$ரூடி$_4$யாலே நாராயணபத$_3$ம் ஸர்வேஶ்வரனுக்கே வாசகமாயிருக்கும்; அத்தாலே விஶேஷிக்கிறது. ஆக, "ப$_4$க$_3$வந் நாராயண" என்று; ஸமஸ்தகல்யாணகு$_3$ணாத்மகனாய், உப$_4$யவிபூ$_4$திநாத$_2$னான ஸர்வேஶ்வரனைச் சொல்லிற்றாயிற்று.

பிராட்டிதிருவடிகளிலே ஶரணம் புகுகிறாராகில், இவ்விடத்தில் இது சொல்லவேண்டுவானென்னென்னில்: ஆற்றுக்கு ஸஹ்யம் போலேயும், விளைநிலத்துக்கு ஏரிக்கட்டு போலேயும், இவளுடைய கல்யாணகு$_3$ணங்களுக்கு அடியான கல்யாணகு$_3$ணயோக$_3$த்தையும், இவளுடைய விபூ$_4$திக்கு அடியான உப$_4$யவிபூ$_4$தியோக$_3$த்தையும் சொல்லுகிறது. அவனைச் சொல்லும்போது 13. "श्रीमान्" (ஶ்ரீமாந்

* द्विषट्कः—द्वादशाक्षरः तदवयवभूतभगवच्छब्दद्योतितः। अष्टार्णः—अष्टाक्षरः नारायणशब्दद्योतितः। तत्साहित्यं—लक्ष्मीसाहित्यमित्यर्थः॥



என்னவேண்டினவோபாதி இவளைச் சொல்லும்போதும் 14. "विष्णुपत्नी" (விஷ்ணுபத்நீ) என்னவேண்டியிறே இருப்பது. நிரூபகத்தையொழிய நிரூப்யத்துக்கு ஸ்தி$_2$தியில்லாதவோபாதி, நிரூப்யத்தையொழிய நிரூபகத்துக்கும் ஸ்தி$_2$தியில்லையே.

(அபி$_4$மத) ஏவம்வித$_4$னாயிருந்துள்ள இவனுக்கு அபி$_4$மதமாயிருக்கை. (அநுரூப) ராஜாக்கள் நீசஸ்த்ரீ காற்கடையிலே துவளுமாபோலே அபி$_4$மதமேயாகிலும் அநநுரூபமாயிருப்பன உண்டு. அங்ஙனன்றிக்கே. † "உனக்கேற்கும்" என்னும்படியே அநுரூபமாயிருக்கை. இப்படி அபி$_4$மதமாய் அநுரூபமாயிருக்கிறவை எவையென்னில்: ஸ்வரூப ரூப கு$_3$ண விப$_4$வைஶ்வர்ய ஶீலாதி$_3$கள். அவனுக்கு இவள் ஸ்வரூபம் அபி$_4$மதமாயிருக்கையாவது, — இவள் ஸ்வரூபம் அவன் ஸ்வரூபத்துக்கு த$_4$ாரகமாயிருக்கை. ராவணன் மாயாஶிரஸ்ஸைக் காட்டினபோதும், இந்த்$_3$ரஜித்து மாயா ஸீதையைக் காட்டினபோதும், இருவரும் மெய்யென்று ப்$_4$ரமிக்கச்செய்தே அந்யோந்யம் த$_4$ரித்துக்கிடந்தவிடம் ஸ்வரூபஸத்தையாலேயிறே. அவன் ஸ்வரூபம் இவளுக்கு த$_4$ாரகமாகிறது ஸ்வரூபத:; இவள் ஸ்வரூபம் அவனுக்கு த$_4$ாரகமாகிறது அபி$_4$மதத்வத்தாலே. அநுரூபமாகையாவது,—15. "यथा सर्वगतो विष्णुस्तथैवेयं" (யத$_2$ா ஸர்வ க$_3$தோ விஷ்ணுஸ் ததை$_2$வேயம்) என்றும், 16. "त्वया च विष्णुना चाम्ब" (த்வயா ச விஷ்ணுநா சாம்ப$_3$) என்றும், 17. "युक्ता रामस्य भवती" (யுக்தா ராமஸ்ய ப$_4$வதீ) என்றும், 18. "तवैवोचितया" (தவைவோசிதயா) என்றும் சொல்லுகிறபடியே இவளுடைய ஸ்வரூபம் அவனோடொக்கச் சொல்லலாம்படியிருக்கை. (ரூப) ரூபமாவது விக்$_3$ரஹம். ஸ்வரூபத்தைச் சொன்னவநந்தரம் ஸ்வரூபகு$_3$ணங்களைச் சொல்ல ப்ராப்தமாயிருக்க, விக்$_3$ரஹத்தைச் சொல்லிற்று, ஸ்வரூபத்துக்கும் ஸ்வரூபாஶ்ரிதமான கு$_3$ணங்களுக்கும் ப்ரகாஶகமாகை

† திருவாய் 10-10-6.

**स्वरूपरूपगुणविभवैश्वर्य-**

ஸ்வரூபரூபகு3ணவிப4வைஶ்வர்ய-

---

**रूपानन्तरगुणशब्दस्सौन्दर्यादिपरः ।**

---

யாலே. ஸ்வரூபம் அபி4மதமாகாநின்ருல் ரூபம் அபி4மதமென்னுமிடம் சொல்லவேண்டாவிறே. அதுதான் § ஸ்வரூபாஶ்ரிதமென்றிறே அபி4மதமாயிற்று. ரூபம் அபி4மதமாகையாவது. / "அகலகில்லேனிறையும்" என்று அவள் துணுக்குத் துணுக்கென்னும்படியான அவன்தானும் மேல் விழும்படியாயிருக்கை. || "மெல்லியல்தோள் தோய்ந்தாய்" ‡ "மாமலர்மங்கை மணநோக்கமுண்டான்" என்று அவனுக்கு * உண்ணும் சோறு பருகுநீரும் இவள் வடிவேயாயிறே இருப்பது. இது அநுரூபமாகையாவது,—ஶீலத்தாலும், வயஸ்ஸாலும் வ்ருத்தத்தாலும், துல்யமாயிருக்கை. (கு3ண) ரூபாநந்தரபா4வித்வத்தாலே இதுதான் ஸௌந்த3ர்யாதி3களாகக் கடவது. இவையும் ரூபத்துக்கு நிறங்கொடுத்து, போ4க3வர்த்த4கங்களுமாயிருக்கையாலே அபி4மதமாயிருக்கும். அத ஏவ அநுரூபமாயிருக்கும். (விப4வ) 19. "**अर्थो विष्णुरियं वाणी**" (**அர்த்தோ2 விஷ்ணுரியம் வாணீ**) என்று அர்த்த2ாம்ஶம் அவனதாய், ஶப்3த3ாம்ஶம் இவளதாயிருக்கை. 20. "**पुन्नामा भगवान् हरिः स्त्रीनाम्नी लक्ष्मीः**" (**புந்நாமா ப4க3வாந் ஹரி: ஸ்த்ரீநாம்நீ லக்ஷ்மீ:**) என்னும்படி புல்லிங்க3பத3ார்த்த2ங்கள் அவனதாய், ஸ்த்ரீலிங்க3பத3ார்த்த2ங்கள் இவளதாயிருக்கை. 21. "**सर्वान् भोगान् परित्यज्य**" (**ஸர்வாந் போ4க3ாந் பரித்யஜ்ய**) என்று ஸர்வபோ4க3ங்களையும் விட்டுக் காடேறப் புறப்பட்டாள் என்கையாலே லீலோபகரணங்களும் போ4கோ3பகரணங்களும் அவன் விபூ4தியிலும் விஞ்சியிருக்கை. அவையாவன,—‡ "முற்றிலும் பைங்கிளியும் பந்துமூசலும் பேசுகின்ற சிற்றில்

---

§ (பா)ஸ்வரூபாஶ்ரய / திருவாய் 6-10-10. || திருவாய் 8-10-1.
* திருவாய் 6-7-1. ‡ பெரியதிரு 3-7-8.



மென்பூவையும் விட்டகன்ற செழுங்கோதை" / "பூவை பைங்கிளிகள் பந்து தூதை பூம்புட்டில்கள்" என்னுமவையும், ஸ்ரக்சந்த3நாதி3களும். இவைதான் ஸாமாந்யமாயும், அந்த:புரபரிகரமாயுமிருக்கும். அங்ஙனன்றியே, 22. "**यो यो जगति पुंभावः**" (**யோ யோ ஜக3தி பும்பா4வ:**) 23. "**शेषित्वे परमः पुमान्**" (**ஶேஷித்வே பரம: புமாந்**) என்னும்படியே ஸவிபூ4திகனான ஈஶ்வரன் என்றுமாம். இது அவனுக்கு அபி4மதமாகிறதும் அந்த:புரபரிகரமாகையாலே. (**ஐஶ்வர்ய**) அதாவது,— ஸகலபத3ார்த்த2 நியமநஸாமர்த்2யம். த்ரிவித4 சேதநரையும் ஸ்வரூபேண நியமிக்கும்; ஈஶ்வரனை ப்ரணயித்வத்தாலே நியமிக்கும். நியமிக்கும் ப்ரகாரமென்னென்னில்: ப3த்3த4ரைக் கர்மாநுகு3ணமாக நியமிக்கும். நித்யமுக்தரை ஸ்வரூபாநுரூபமாக நியமிக்கும். ஈஶ்வரனை ரக்ஷணாநுகு3ணமாக நியமிக்கும். இதுதான் அபி4மதமாகிறதும் புருஷோத்தமத்வ ஸூசகமாகையாலே. ப்ரணயினியினுடைய நியமனம் ப்ரணயிக்குப் பும்ஸ்த்வாவஹமாயிருக்குமிறே. இது ஜ்ஞாநாதி3கு3ணங்களுக்கும் உபலக்ஷணம். (**ஶீல**) ஶீலம் ராக்ஷஸிகள் பக்கல் ப்ரஸித்3த4ம். ராவணனைக் குறித்து 24. "**मित्रमौपयिकं कर्तुं**" (**மித்ரமௌபயிகம் கர்த்தும்**) என்றும், 25. "**विदितः स हि धर्मज्ञः**" (**விதி3தஸ் ஸ ஹி த4ர்மஜ்ஞ:**) என்றும், ராக்ஷஸிகளைக் குறித்து 26. "**भवेयं शरणं हि वः**" (**ப4வேயம் ஶரணம் ஹி வ:**) என்றும், 27. "**राजसंश्रयवश्यानां**" (**ராஜஸம்ஶ்ரய வஶ்யாநாம்**) என்றும், 28. "**पापानां वा शुभानां वा**" (**பாபாநாம் வா ஶுபா4நாம் வா**) என்றும் திருவடியோடே § மறுதலைத்து ரக்ஷித்தாளிறே. இக்கு3ணம் அபி4மதமாகிறது, — தனக்கு ஸ்வரூபமான ரக்ஷணத்துக்கு உபயோகி3யாகையாலே. 'ஆதி3' ஶப்3த3த்தாலே அநுக்தமான கு3ணவிஶேஷங்களை நினைக்கிறது. ஸமஸ்தகல்யாண கு3ணாத்மகனைப் பேசிலும் இவளைப் பேசிமுடியாது என்கை. (**அநவதி4காதிஶய**) இவை

---

/ திருவாய் 6-7-3. § (பா) மலைந்தும்.

**शीलाद्यनवधिकातिशयासङ्ख्येयकल्याणगुणगणाम्, पद्मवनालयाम्, भगवतीम्, श्रियम्, देवीम्, नित्यानपायिनीम्, निरवद्याम्, देवदेवदिव्यमहिषीम्, अखिलजगन्मातरम्,**

**ஶீலாத்3யநவதி4காதிஶயாஸங்க்2யேய கல்யாணகு3ணக3ணாம், பத்3மவநாலயாம், ப4க3வதீம், ஶ்ரியம், தே3வீம், நித்யாநபாயிநீம், நிரவத்3யாம், தே3வதே3வதி3வ்யமஹிஷீம், அகி2லஜக3ந்மாதரம்,**

---

**परत्वसौलभ्यकोटिनिविष्टगुणजातप्रदर्शनार्थौ ऐश्वर्यशीलशब्दौ। अनवधिकेत्यादि स्फुटार्थः। परत्वसौलभ्ययोस्समाख्याः प्रमाणयति पद्मेत्यादिभिश्चतुर्भिः पदैः। सदा अपराधानभिज्ञतायै नित्यानपायिनीमिति पदं। दौर्लभ्यरूपावद्यरहिता निरवद्या। कृताभिषेका महिषी। अतः अप्रतिहतचिकीर्षिता। अखिलशब्दः स्वान्तर्भावपरः। न ह्यसद्वर्जितमिति भावः॥**

---

தான் ஓரொன்றே அபரிச்சே2த்3யமாயிருக்கும். (**அஸங்க்2யேய**) எண்ணிறந்திருக்கை. (**கல்யாண**) 29. "**इयं तु भवतो भार्या दोषैरेतैर्विवर्जिता**" (**இயம் து ப4வதோ பா4ர்யா தே3ாஷைரேதைர் விவர்ஜிதா**) என்கிறபடியே உள்ளதெல்லாம் அழகியதாயிருக்கை. இவள் கு3ணங்களுக்கு வ்யாவர்த்தகம் அவன் கு3ணங்கள். அவன் கு3ணங்களுக்கு தே3ாஷமேதென்னில், அவனுக்கு ஸ்வரூபாநுப3ந்தி4யான நிரங்குஶஸ்வாதந்த்ர்யமுண்டு. 30. "**क्रोधमाहारयत्**" (**க்ரோத4மாஹாரயத்**) என்று கோபத்தை அருளப்பாடிட்டுக் கார்யம் கொள்ளவேண்டும் த3ஶையுண்டு. அதுதானும் இவளுக்கு இன்றிக்கேயிருக்கை. (**கு3ணக3ணாம்**) இவைதான் திரள் திரளாயிருக்கை.

(**பத்3மவநாலயாம்**) பத்3மஶப்3த3ம் மங்க3ளங்களுக்கு உபலக்ஷணமாய், 'ஸர்வமங்க3ள நிவாஸிநீ' என்கை. அங்ஙனன்றியே, 31. "**सर्वगन्धः**" (**ஸர்வக3ந்த4:**) என்கிற வஸ்துவையும் ஸ்வஸம்ப2ந்த4த்தாலே பரிமளிதமாக்குகை



என்றுமாம். பத்3மஶப்3த3த்தாலே போ4க்3யதையைச் சொல்லிற்ருய், அத்தாலே நிரதிஶயபோ4க்3யபூ4தை என்றுமாம். பரிமளமிறே இவள் வடிவுக்கு உபாத3ானம். 32. "**सर्वगन्धः सर्वरसः**" (**ஸர்வக3ந்த4ஸ் ஸர்வரஸ:**) என்னும் இவையிரண்டும் இத்தலையிலே கிடந்தபடி. (**ப4க3வதீம்**) ப4க3வச்ச2ப்3த3ம் பூஜ்யவாசி. 12. "**तत्र पूज्यपदार्थोक्ति परिभाषासमन्वितः। शब्दोऽयं नोपचारेण**" (**தத்ர பூஜ்யபத3ார்த்தே2ாக்தி பரிபா4ஷாஸமந்வித:। ஶப்3தே3ாऽயம் நோபசாரேண**) என்கிறவனுக்கும் பூஜ்யையாயிருக்கை. ஆக, (**பத்3மவநாலயாம் ப4க3வதீம்**) என்கிற இத்தால் தன்வழியாக அவனைப் பற்றிஞல் குற்றம் பாராதபடி அவனைத் தன் போ4க்3யதையாலே துவக்கிப் பொறுப்பிக்குமவளென்கை. (**ஶ்ரியம்**) தன்னைப்பற்றி ஸர்வமும் உண்டாம்படியாய், தான் அவனைப்பற்றி உளளுமாயிருக்கை. இதிலே நிருக்தி ப்ரக்ரியையும் நடக்கக்கடவது. (**தே3வீம்**) வடிவில் புகரிருக்கிறபடி. அவனேட்டைச் சேர்த்தியாலே த்3யோதமானையாயிருக்கிறவளை. (**நித்யாநபாயிநீம்**) 15. "**विष्णोः श्रीरनपायिनी**" (**விஷ்ணோ: ஶ்ரீரநபாயிநீ**) என்கிறபடியே அவனேடுண்டான நித்யஸம்ஶ்லேஷத்தாலே அபாயமின்றியேயிருக்கை. **அபாய:**—விஶ்லேஷ: (**நிரவத்3யாம்**) கீழ்ச்சொன்ன ஏற்றமெல்லாம் ஸ்வார்த்த2மாயிராதே அத்தலைக்கேயாம்படியிருக்கை. ஏதேனுமொன்று 'எனக்கு' என்கை அவத்3யம். 'பிறர்க்கு' என்கை நிரவத்3யம். இனி விஷயவிபா4க3மேயுள்ளது. அது வகுத்த விஷயமாமித்தனையே வேண்டுவது. அவன்தானும், தன்னையும் தன் உடைமையையும் 32. "**भक्तानां**" (**ப4க்தாநாம்**) என்றிறே இருப்பது. (**தே3வதே3வதி3வ்யமஹிஷீம்**) ஸர்வேஶ்வர ஸாம்ராஜ்யத்திலே *தேவர்க்கும் தேவனுனவனேடொக்க அபி4ஷிக்தையானவள். 33. "**कृताभिषेका महिषी**" (**க்ருதாபி4ஷேகா மஹிஷீ**) (**அகி2லஜக3ந்மாதரம்**) இப்பெரிய மேன்மையைக்கண்டு இருய்க்க

---

* திருவாய் 8-1-5.

**असन्मातरम् , अशरण्यशरण्याम् अनन्यशरणः शरणमहं प्रपद्ये ॥**

**அஸ்மந்மாதரம், அஶரண்யஶரண்யாம் அநந்யஶரண: ஶரண மஹம் ப்ரபத்3யே ॥**

---

**शरण्यं भगवन्तं अलब्धवन्तः अशरण्याः। अहमपि तेष्वेक इत्याह अनन्य इति।**

---

வேண்டாதபடி ஸகலசேதநரோடுண்டான அவிநாபூ4த மான குடல்துடக்கைச் சொல்லுகிறது. ஸார்வபௌ4ளமன் மஹிஷி, தன் ப்ரஜை சேற்றையளைந்து மடியிலே ஏறப் புக்கால் அணைத்து உச்சிமுகக்குமித்தனையிறே. ப்ரஜை யின் பக்கல் ப்ராப்தியேயிறே ஜீவிப்பது. † அகி3லஶப்3த3த் தில் தாமும் அந்தர்ப்பூ4தராகையாலே தம்மையும் கூட்டிக் கொள்ளுகிறார், — (**அஸ்மந்மாதரம்**) என்று. (**அஶரண்ய ஶரண்யாம்**) கு3ணலேஶமாத்ரத்தாலே குற்றங்களையடையப் பொறுத்து உகக்குமவள். அங்ஙனன்றிக்கே 25. **"तेन मैत्री भवतु"** (தேந மைத்ரீ ப்4வது) என்று குற்றத்தோடே உகக்குமவள். புறம்பு புகலற்றார்க்கு ப4க3வத்3விஷயம் புகலாயிருக்கும். ப4க3வத்3விஷயத்துக்கும் புறம்பாயிருப் பார்க்கும் புகலாயிருக்கும் இவள். / "செய்தாரேல் நன்று செய்தார்" என்னுமவர் சீறிக் கையும் வில்லுமானவன் றும், இவள் திருவடிகளே புகலாயிருக்கும். "ஸர்வலோக ஶரண்யர்" என்று காளமூதித் திரிகிறவர் அஶரண்ய ரானவன்றும் இவள் ஶரண்யையாயிருக்கும். * ஶரணம் என்கிற உக்தியைப்பற்றி ஶரண்யர் அவர். ஸம்ப3ந்த4மே

---

† "அகி2ல ஶப்3த3த்தில் தாமும் அந்தர்ப்பூ4தராயிருக்கச் செய்தேயும், அகி2ல ஜக3த்தும் ஒரு தட்டும், தாம் ஒரு தட்டுமாகத் தம் பக்கலில் வாத்ஸல்யாதிஶயம் கண்டா ராகையாலே விஶேஷித்து அருளிச்செய்கிறார் அஸ்மந் மாதரம் என்று." என்று சில சுவடிகளில் பாட2மென்பர்.

/ பெரியாழ்-திரு 4-9-2. * ஸ்ரீகு3ண 50.



ஹேதுவாக ஶரண்யையாயிருக்கும் இவள். 34. **"स पित्रा च परित्यक्तः"** (ஸ பித்ரா ச பரித்யக்த:) 24. **"मित्रमौपयिकं कर्तुं"** (மித்ரமௌபயிகம் கர்த்தும்) 25. **"विदितस्स हि धर्मज्ञः"** (விதி3தஸ்ஸ ஹி த4ர்மஜ்ஞ:) 27. **"राजसंश्रयवश्यानां"** (ராஜஸம்ஶ்ரய வஶ்யாநாம்) 28. **"पापानां वा शुभानां वा"** (பாபாநாம் வா ஶுப4ாநாம் வா) "அநாலோசிதவிஶேஷாஶேஷலோக **ஶரண்ய**" என்கிறபடியே ஸர்வஸமாஶ்ரயணீயமான ப4க3வத்3விஷயத்துக்குப் புறம்பாயிருப்பாருமுண்டோவென் னில்: (**அநந்ய ஶரணோऽஹம்**) அந்த அநந்யஶரணனா கிறேன் நான் என்கிறார். (**ஶரணம் ப்ரபத்3யே**) அஶரண் யர்க்கும் ஶரண்யரான தேவர் திருவடிகளையே உபாய மாக அத்4யவஸிக்கிறேன். அஶரண்யர்க்கும் ஶரண்யை யாவதென்னென்னில்: அகி2லஜக3ந்மாதாவாகையாலே அபேக்ஷாநிரபேக்ஷமாகப் பரிக்3ரஹிக்கும் தேவர்க்கும் பரிக்3 ரஹித்தல்லது நிற்கவொண்ணாதபடியான அபேக்ஷையை யும் பண்ணினேன். 35. **"तां पद्मनेमिं शरणमहं प्रपद्ये"** (தாம் பத்3மநேமிம் ஶரணமஹம் ப்ரபத்3யே).

இரண்டாவது சூர்ணை அவதாரிகை:— (பாரமார்த்தி2க) கீழ் பிராட்டியுடைய ஶரண்யதையையும். அதுக்கடியான ஊற்றுவாயையும், தம்முடைய அநந்யக3தித்வத்தையும் சொல்லி, அவள் திருவடிகளிலே ஶரணம் புக்கு நின்றார். அநந்தரம் 'உமக்கு அபேக்ஷிதமென்' என்று பிராட்டி திருவுள்ளமாக, "கைங்கர்யருசியும் ப்ரபத்திநிஷ்டை2யும் எனக்கு உண்டாகவேணும்" என்கிறார். ஈஶ்வரன் திருவடி களிலே கைங்கர்யஸித்3தி4க்கிறே ஶரணம் புகுவது. அவ் வளவன்றிக்கே, ருசிவிஶ்வாஸங்களென்று தனித்தனியே அபேக்ஷித்துப் பெறவேண்டுவன சில அதி4காரி விஶேஷணங்களுண்டிறே. இப்போது அபேக்ஷித்துப்பெற வேண்டும்படி இதுக்குமுன்பு இவர்க்கு இன்றிக்கேயிருந் ததோ? என்னில்: உண்டானாலும், தந்தாமுக்கு என்று மில்லையாகவிறே தந்தாமை நினைத்திருப்பது.

२. पारमार्थिकभगवच्चरणारविन्दयुगलैकान्तिकात्यन्तिक-
परभक्तिपरज्ञानपरमभक्तिकृतपरिपूर्णानवरतनित्यविशदतमानन्यप्रयोजन-

2. பாரமார்த்தி$_2$க ப$_4$க$_3$வச்சரணாரவிந்த$_3$யுக$_3$ளைகாந்திகாத்-யந்திக பரப$_4$க்தி பரஜ்ஞாந பரமப$_4$க்தி க்ருத பரிபூர்ணாநவரத நித்யவிஶத$_3$தமாநந்யப்ரயோஜந-

---

२. किमपेक्षितमित्यत्राह पारमार्थिकेति। अनुभवविशेषणम्। परमपुरुषार्थान्तर्भूतत्वात्, स्वयं परमपुरुषार्थत्वात्, अकृत्रिमत्वाद्वा पारमार्थिकत्वम्। अकृत्रिमत्वं - निरुपाधिकत्वम्। भक्तिविशेषणं वा पारमार्थिकशब्दः। चरणारविन्देति-मातुः स्तन्यं पुत्रस्येव शेषभूतस्य प्राप्यमिति भावः। ऐकान्तिकत्वं - फलान्तरार्थत्वाभावात् भगवदेक-विषयत्वम्। आत्यान्तिकत्वं—अत एव सदानुवृत्तिः। नित्ययुक्त इति यावत्॥

उत्तरोत्तरसाक्षात्काराभिनिवेशः परभक्तिः। साक्षात्कारः पर-ज्ञानम्। उत्तरोत्तरानुभवाभिनिवेशः परमभक्तिः। परिपूर्णत्वादिपद-षटमनुभवविशेषणम्। परव्यूहादिसर्वावस्थभगवद्विषयत्वं परिपूर्णत्वम्। सकृत्त्वव्यावृत्त्यर्थं अनवरतत्वम्। अविरतेच्छावधिमत्त्वव्युदासाय नित्यत्वम्। विरतनित्यत्वव्युदासाय अनवरतत्वम्। स्नानाग्निहोत्रादिकं हि विरतनित्यम्। परोक्षत्वव्युदासाय विशदतमत्वम्। प्रयोज-नान्तरार्थत्वव्युदासाय अनन्यप्रयोजनत्वम्। तत्र हेतुः—अनवधिकाति-शयप्रियत्वम्। प्रयोजनान्तरार्थत्वाभावेऽपि सावधिकातिशयप्रियत्व-व्युदासार्थं अनवधिकातिशयप्रियत्वमुक्तम्। ईदृशानुभवेन जनिता

---

வ்யா:—(பாரமார்த்தி$_2$க) 'அர்த்த$_2$ம்' என்று ப்ரயோ ஜனத்துக்கும் மெய்க்கும் பெயர். இது பரப$_4$க்திக்கு விஶேஷணமானபோது, அதனுடைய அக்ருத்ரிமத்வம் சொல்லுகிறது. திருவடிகளுக்கு விஶேஷணமானபோது



அதினுடைய பரமப்ரயோஜநத்வம் சொல்லுகிறது. இப்பிரிவுக்கு ப்ரயோஜநமென்னென்னில்: ப$_4$க்தி விஷயமானபோது திருவடிகள் பரமப்ரயோஜநமாகக் கடவது. திருவடிகள் விஷயமானபோது, ப$_4$க்தி அக்ருத்ரிமையாகக் கடவது. **(ப$_4$க$_3$வச்சரணாரவிந்த$_3$)** கீழ்ச்சொன்ன ப$_4$க$_3$வச்ச$_2$ப்$_3$த$_3$ம் ஸர்வோத்கர்ஷ வாசி. இது கு$_3$ணயோக$_3$த்தால் வந்த ரஸ்யதையைச் சொல்லுகிறது. கு$_3$ணங்களும் போ$_4$க்$_3$யமாயிருக்கையாலே பரமப$_4$க்திஜநகம். **(சரணாரவிந்த$_3$)** விக்$_3$ரஹவத்தையால் வந்த போ$_4$க்$_3$யதை சொல்லுகிறது. **(யுக$_3$ள)** சேர்த்தியால் வந்த போ$_4$க்$_3$யதை. **(ஐகாந்திக)** ஏகமே அந்தமாயிருக்கை. அதாவது — வேறொரு விஷயத்தையுடைத்தன்றிக்கேயிருக்கை. **(ஆத்யந்திக)** அந்தத்தை அதிக்ரமித்திருக்கை. அதாவது — நித்யமாயிருக்கை. **(பரப$_4$க்திபரஜ்ஞாநபரமப$_4$க்தி)** பரப$_4$க்தியாவது -- ஸம்ஶ்லேஷவிஶ்லேஷ ஸுக$_2$து$_3$:க்க$_2$ராம்படியான ப்ரேமவிஶேஷம். பரஜ்ஞாநமாவது— இதினுடைய விபாகத$_3$ஶையான ஸாக்ஷாத்காரம். பரமப$_4$க்தியாவது—க்ஷணகாலமும் விஶ்லேஷத்தைப் பொறுக்கமாட்டாத த$_3$ஶை. **"உப$_4$யபரிகர்மிதஸ்வாந்தஸ்ய"** என்கிறபடியே ஜ்ஞாநகர்மங்களாலே ஸம்ஸ்க்ருதாந்த:கரணனாய், ப$_4$க்தி பிறந்து, அதினுடைய விபாகத$_3$ஶை பரமப$_4$க்தியாகக் கடவது உபாஸகனுக்கு. இவர்க்கு அந்த ஸ்த$_2$ானத்திலே ப$_4$க$_3$வத$_3$நுக்$_3$ரஹம் நிற்க, மேலுள்ள த$_3$ஶைகளை அபேக்ஷிக்கிறார். **(க்ருத)** இவற்றாலே பண்ணப்பட்ட. **(பரிபூர்ண)** பரிபூர்ணமாகையாவது ஸ்வரூபரூபகு$_3$ண விபூ$_4$திகளித்தனையும் ஒருகாலே அநுப$_4$வவிஷயமாகை. **(அநவரத)** அவிச்சி$_2$ன்னமாயிருக்கை. அதாவது — இடைவிடாதே செல்லுகை. **(நித்ய)** யாவதா$_3$த்மப$_4$ாவியாயிருக்கை. **(விஶத$_3$தம)** விஶத$_3$மாவது—பரப$_4$க்தித$_3$ஶையில் அநுப$_4$வம். விஶத$_3$தரமாவது—பரஜ்ஞாநத$_3$ஶையில் அநுப$_4$வம். விஶத$_3$தமமாவது—பரமப$_4$க்தித$_3$ஶையில் அநுப$_4$வம். **(அநந்யப்ரயோஜந)** 'அநுப$_4$வஜநிதப்ரீதியும், ப்ரீதிகாரித கைங்கர்யமும் வேண்டா; இதுதானே அமையும்'

अनवधिकातिशयप्रियभगवदनुभवजनितानवधिकातिशयप्रीतिकारिताशेषा-
वस्थोचिताशेषशेषतैकरतिरूपनित्यकैङ्कर्यप्राप्त्यपेक्षया पारमार्थिकी भग-
वच्चरणारविन्दशरणागतिर्यथावस्थिता अविरताऽस्तु मे॥

३. अस्ते ते॥

அநவதி4காதிஶயப்ரியப4க3வத3நுப4வஜநிதாநவதி4காதிஶய -
ப்ரீதிகாரிதாஶேஷாவஸ்தோ2சிதாஶேஷஶேஷதைகரதிரூப -
நித்யகைங்கர்யப்ராப்த்யபேக்ஷயா பாரமார்த்தி2கீ ப4க3வச்சரணார-
விந்த3ஶரணாக3திர் யதா2வஸ்தி2தா அவிரதாऽஸ்து மே ॥

3. அஸ்து தே ॥

---

अनवधिकातिशयप्रीतिः—"अहो मया ईदृशानुभवो लब्धः" इति पूर्वानु-
भवलब्धविषयनिरवधिकातिशयानुकूलप्रीतिसन्तानरूपा। तया अनु-
कारितम्। अशेषावस्थाः—आस्थानान्तःपुरस्थित्यादयः। अशेषशब्दः-
छत्रचामरकलाचीपादुकाग्रहणताम्बूलदानादिपरः। अनन्तवैनतेयादीनां
सर्वविधकैङ्कर्यप्राप्तावपि कैङ्कर्यं प्रतिनियतम् दृश्यते। तत्कथमिति
शङ्कायामाह रतिरूपेति। स्वेन कृतत्वेऽपि परप्रीतिरेव फलम्।
"प्रहर्षयिष्यामि" इति ह्युच्यते। तस्मादन्यकृतत्वेऽपि कैङ्कर्यस्य तज्ज-
नितपरप्रीतिं दृष्ट्वा स्वकृतत्वे सतीव प्रीतिस्सर्वेषां जायत इति तादृश-
प्रीतिरूपं कैङ्कर्यमित्यर्थ इति मन्त्रचतुर्थ्यर्थोक्तिः। पारमार्थिकीति
तमःकार्यव्युदासाय। आनुकूल्यादिशरीरवती च सा। तद्धि तस्या
उपायान्तरेभ्यो व्यावृत्तं स्वरूपम्। यथावस्थितेति रजःकार्यव्युदासाय।
प्रपत्तव्यविषयसंबन्धरूपः प्रकारः। तत्साहित्यमभिप्रेतम्। अविरता
आफलसिद्धेरविश्रान्ता। अव्यवहितसाधनमित्यर्थः। व्यवहितसाधनं
हि मध्ये साधनान्तरप्राचुर्ये स्वयं विरतं स्यात्। साक्षादस्तु मे।

३. अस्तु त इति—"तेन मैत्री भवतु ते" इत्यादिमानगत्या
निश्चित्येति केचित्।



என்னும்படியிருக்கை. (அநவதி4காதிஶயப்ரிய) அநவதி4க
மான அதிஶயத்தை உடைத்தான ப்ரீதி. (ப4க3வத3நுப4வ)
சரமஶரீராவஸாந ஸமநந்தரமாக அர்ச்சிராதி3க3தியாலே
போய்ப் பரமபத3த்தில் அநுப4விக்கும் அநுப4வம். (ஜநிதா
நவதி4காதிஶயப்ரீதிகாரித) அத்தால் பிறந்த ப்ரீதியாலே
பண்ணுவிக்கப்பட்ட; ஸ்வார்த்த2ஙிஜந்தோ வா. (அஶே-
ஷாவஸ்தோ2சித) ஸர்வாவஸ்தை2களிலும் அனுகூலமா
யிருக்கை. (அஶேஷஶேஷதைகரதிரூப) 36. "निवासशय्या"
(நிவாஸஶய்யா) இத்யாதி3ப்படியே ஸர்வவித4ஶேஷதை
யிலுமுண்டான அபி4நிவேஶத்தையே வடிவாக உடைத்தா
யிருக்கை. (நி த் ய) அபுநராவ்ருத்திலக்ஷணமாயிருக்கை.
(கைங்கர்யப்ராப்த்யபேக்ஷயா) கைங்கர்யப்ராப்தியிலுண்டான
அபேக்ஷையாலே. (பாரமார்த்தி2கீ) ஆர்த்தரூபமாயிருக்கை.
(ப4க3வத்) ஜ்ஞாநஶக்த்யாதி3களால் பூர்ணமான விஷய
மாகையாலே ஸஹாயாந்தரநிரபேக்ஷமான உபாயபௌஷ்
கல்யம் சொல்லுகிறது. (சரணாரவிந்த3) விக்3ரஹத்தி
னுடைய பரமோபாயத்வம் சொல்லுகிறது. (ஶரணாக3தி:)
ஸலக்ஷணமாயிருக்கை. (யதா2வஸ்தி2தா) உபாயாந்தரங்களு
டைய அநுபாயத்வபு3த்3தி4பூர்வகமாக அத்தைப் பற்றுகை
போலே காணும். அதாகிறது, — பற்றி விடுகையுமன்
றிக்கே, பற்றிப்பற்றுகையுமன்றிக்கே "ஸ்நாத்வா பு4ஞ்ஜீத"
என்னுமாபோலே விட்டுப்பற்றுகை. (யதா2வஸ்தி2தா)
என்றது இருந்தபடியே என்றபடி. இது இப்படிப்போலே
காணுமிருப்பது. ரஹஸ்யமாகையாலே நேராக வெளியிடா
தொழிகிறார். (அவிரதாऽஸ்து மே) அநந்யக3தியாயிருந்
துள்ள எனக்கு யாவத்ப்ராப்தி விச்சே2த3மின்றிக்கே
யொழியவேணும்.

மூன்றாவது சூர்ணை வ்யா:— (அஸ்து தே) பிராட்டி
அருளிச்செய்கிறார், — உமக்கு அப்படியே உண்டாயிடுக.

४. तयैव सर्वं संपत्स्यते ॥

५. अखिलहेयप्रत्यनीककल्याणैकतानस्वेतरसमस्तवस्तुविलक्षण - ज्ञानानन्दैकस्वरूप!

4. தயைவ ஸர்வம் ஸம்பத்ஸ்யதே ॥

5. அகி₂லஹேயப்ரத்யநீக கல்யாணைகதாந ஸ்வேதர ஸமஸ்த வஸ்து விலக்ஷண ஜ்ஞாநாநந்தை₃க ஸ்வரூப!

---

४. स्वसंबन्धिसंबन्धिनिस्तरणमपि सर्वशब्दाभिप्रेतम् ॥

५. अथ द्वयस्थं नारायणशब्दं विवृणोति-अखिलेत्यादिना। तत्र प्रथमपदेन नारशब्दवाच्यानां धर्म्युच्यते। अखिलशब्दः चिदचिद्गतक्लेशादिभौमविकारादिहेयपरः। प्रत्यनीकेति-न केवलं विरहमात्रमित्यर्थः। आनन्दकल्याणशब्दौ स्वपरापेक्षया अनुकूलपरौ। आनन्दविवरणं वा कल्याणशब्दः। कल्याणानां गुणानामेकास्पदमिति वा कल्याणैकतानशब्दार्थः। यद्वा स्वसंबन्धिनामपि मङ्गलावहता कल्याणशब्दार्थः। एकशब्देन प्रदेशभेदेन जडत्वप्रतिकूलत्वव्युदासः ॥

---

நாலாவது சூர்ணை வ்யா:— (தயைவ ஸர்வம் ஸம்பத்ஸ்யதே) அப்படிப்பட்ட உபாயந்தன்னாலேயே பரப₄க்தி தொடக்கமாகக் கைங்கர்யமீருக நடுவுள்ள த₃ஶைகளடைய உண்டாகக்கடவது.

ஐந்தாவது சூர்ணை அவ:— மேல் ஆஶ்ரயணீயவஸ்து நிர்த்தே₃ஶம் பண்ணுகிறார். ஆஶ்ரயணீயனானவன் நாராயணனிறே. அதில் நாரஶப்₃த₃ார்த்த₂ம் மேல் சொல்லுவதாகக்கோலி, அதுக்கு ஆஶ்ரயமாய் அயநஶப்₃த₃ார்த்த₂மான தி₃வ்யாத்மஸ்வரூபத்தை முதலிலே அருளிச்செய்கிறார்.



வ்யா:—(அகி₂லஹேயப்ரத்யநீக) 37."निर्गुण" (நிர்க்கு₃ணம்) என்கிற வஸ்து இருக்கிறபடி. ஹேயங்களாவன,—அசித்₃க₃தமான பரிணாமமும், சேதநக₃தமான து₃:க்க₂ாஜ்ஞாநாதி₃களும், நித்யமுக்தர் பக்கலுண்டான பாரதந்த்ர்யமும். அகி₂லஶப்₃த₃த்தாலே உப₄யவிபூ₄தியிலுண்டான சேதநாசேதநங்களைச் சொல்லுகிறது. பாரதந்த்ர்யம் ஹேயமாமோவென்னில்: புருஷனுக்கு ஸ்தநோத்₃பே₄த₃மும் ஸ்த்ரீக்கு ஶ்மஶ்ருஸம்யோக₃மும்போலே பரதந்த்ரனுக்கு ஸ்வாதந்த்ர்யம் ஹேயம். அப்படியே ஸ்வதந்த்ரனான ஈஶ்வரனுக்குப் பாரதந்த்ர்யம் ஹேயமாகக்கடவது. ப்ரத்யநீகத்வமாவது, — பதா₃ர்த்த₂ாந்தரஸம்ஸர்க்க₃ாப₄ாவாத₄ாரத்வம். ஆஶ்ரிதருடைய ஹேயநிரஸநத்துக்கு அடியான ஹேயப்ரத்யநீகத்வமென்றுமாம். (கல்யாணைகதாந) கல்யாணைகவிஸ்தார. அக₂ண்டை₃கரஸம் போலே இஶ்ஶப்₃த₃ம். (ஸ்வேதர ஸமஸ்தவஸ்துவிலக்ஷண) அத ஏவ ஸமஸ்தவஸ்துவிலக்ஷண. (அநந்த) த்ரிவித₄பரிச்சே₂த₃ரஹித. விபு₄த்வாத் தே₃ஶபரிச்சே₂த₃ராஹித்யம். நித்யத்வாத் காலபரிச்சே₂த₃ராஹித்யம். ஸ்வவ்யதிரிக்தஸமஸ்த வஸ்துக்களுக்கும் தான் ப்ரகாரியாய், தனக்கு ப்ரகார்யந்தரமில்லாதபடி நிற்கையாலே ஸத்₃ருஶவஸ்த்வப₄ாவத்தாலே வஸ்துபரிச்சே₂த₃ராஹித்யம். * துலையாலேயாதல், ப்ரஸ்த₂ாதி₃களாலேயாதல் வரும் பரிச்சே₂த₃ராஹித்யத்தைச் சொல்லிற்றாகவுமாம். (ஜ்ஞாநாநந்தை₃கஸ்வரூப) அநந்யாதீ₄நப்ரகாஶத்வாஹ்லாத₃கரத்வஜ்ஞாநமேவ யஸ்ய ஸ்வரூபம் ஸ:—ஜ்ஞாநாநந்தை₃கஸ்வரூப: ; அதாவது,—ஸ்வயம்ப்ரகாஶத்வ ஸுக₂ரூபத்வங்களே ஸ்வரூபமாயிருக்கை. இப்படி தி₃வ்யாத்மஸ்வரூபம் சொல்லப்பட்டது.

அநந்தரம், நாரஶப்₃த₃வாச்யங்களில் ஸ்வரூபகு₃ணங்களுக்கு ப்ரகாஶகமாய் பஞ்சோபநிஷண்மயமான தி₃வ்ய

---

* துலை-தராசு, ப்ரஸ்த₂ம்-படிக்கல்; பரிமாணத்தையளக்கும்படி முதலான பாத்ரமுமாம்.

[(ஸீதையைப் பிரிந்த) ராமன் எப்போதும் தூக்கமற்றவராகவே இருக்கிறார்; நரஶ்ரேஷ்ட2ரான அவர் தூங்கினாலும் ‘ஸீதே’ என்னும் அழகிய சொல்லை உச்சரித்துக் கொண்டே விழித்தெழுகிறார்.]

47. கு3ஹேந ஸஹிதோ ராமோ லக்ஷ்மணேந ச ஸீதயா

[ராமபிரான் கு3ஹனோடும், லக்ஷ்மணனோடும், சீதையோடும் கூடியவரானார்.]

48. ஶப3ர்யா பூஜித: ஸம்யக் ராமோ த3ஶரத2ாத்மஜ:

[த3ஶரத2குமாரனான ராமபிரான் ஶப3ரியாலே நன்கு பூஜிக்கப்பட்டான்.]

49. ஸ்வார்த்த2 நிரபேக்ஷபரது3:க்க2ாஸஹிஷ்ணுத்வம்

[தனக்குப் ப2லனை எதிர்பாராமல், பிறர் துன்பம் பொறாமலிருத்தல் த3யையாகும்.]

50. தத2ாவித4ம் த்3விஜம் த்3ருஷ்ட்வா நிஷாதே3ந நிபாதிதம்।
ருஷேர் த4ர்மாத்மநஸ் தஸ்ய காருண்யம் ஸமபத்3யத ॥

[வேடனால் அடிபட்ட அப்பறவையைப் பார்த்தவுடன் த4ர்மாத்மாவான அந்த வால்மீகி மஹர்ஷிக்குக் காருண்யமுண்டாயிற்று.]

51. ஏஹ்யேஹி பு2ல்லாம்பு3ஜ பத்ரநேத்ர
நமோऽஸ்து தே தே3வவராऽப்ரமேய।
ப்ரஸஹ்ய மாம் பாதய லோகநாத2
ரதே2ாத்தமாத் பூ4தஶரண்ய ஸங்க்2யே ॥

[மலர்ந்த தாமரையிதழ்போன்ற திருக்கண்களையுடையவனே! வாராய்! வாராய்! ஸர்வபூ4தங்களுக்கும் ஶரண்யனே! யுத்3த4த்தில், என்னை இந்தச் சிறந்த ரத2த்திலிருந்து ப3லாத்கரித்து வீழ்த்துவாய். லோகநாத2னே! தே3வஶ்ரேஷ்ட2னே! அளத்தற்கரியாய்! உனக்கு நமஸ்காரம்.]

47. ரா-ப3ா 2-30. 48. ரா-ப3ா 2-58. 50. ரா-ப3ா 2-13.
51. பா4ர-பீ4ஷ்மபர்வம் 59-98.



52. அஸூர்யமிவ ஸூர்யேண நிவாதமிவ வாயுநா।
க்ருஷ்ணேந ஸமுபேதேந ஜஹ்ருஷே பா4ரதம் புரம் ॥

[ஸூர்யனற்றவிடத்தில் ஸூர்யன் உதி3த்தாற்போலவும், காற்றில்லா இடத்தில் காற்றடித்தாற்போலவும் க்ருஷ்ணன் வந்ததும் பா4ரதராஜதா4னி ஆநந்தி3த்தது.]

53. ய ஆத்மதா3 ப3லதா3:

[எந்தப் பரமபுருஷன் தன்னையும் கொடுத்துத் தன்னை அனுப4விக்கத்தக்க ப3லத்தையும் கொடுக்கிறானோ.]

54. அத2 மத்4யமகக்ஷ்யாயாம் ஸமாக3ச்ச2த் ஸுஹ்ருஜ்ஜநை:।
ஸ ஸர்வாநர்த்தி2நோ த்3ருஷ்ட்வா ஸமேத்ய ப்ரதிநந்த்3ய ச ॥

[அந்த ஸ்ரீராமன் யாசிப்பவர்களைக் கண்டு, (அவர்களை) எதிர்கொண்டு, ஆநந்த3ப்படுத்திப் பிறகு நடுக்கட்டில் நண்பர்களுடன் சேர்ந்தார்.]

55. உதா3ராஸ் ஸர்வ ஏவைதே ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம்

[இவர்கள் எல்லாரும் உதா3ரமானவர்களே; ஜ்ஞாநியோ எனக்கே ஆத்மா (தா4ரகன்) என்று என் ஸித்3தா4ந்தம்.]

56. உத்ஸ்மயித்வா மஹாபா3ஹு: ப்ரேக்ஷ்ய சாஸ்தி2 மஹாப3ல:।
பாதா3ங்கு3ஷ்டே2ந சிக்ஷேப ஸம்பூர்ணம் த3ஶயோஜநம் ॥

[மஹாப3லரும் தடங்தோளருமான ராமபிரான் முறுவலித்துக் கொண்டு அந்த து3ந்து3பி4யின் எலும்பைப் பார்த்து, பத்து யோஜனை தூ3ரத்திற்கு அப்பால், அதைத் தன் கால் கட்டைவிரலாலே தள்ளினார்.]

57. மித்ரபா4வேந ஸம்ப்ராப்தம் ந த்யஜேயம் கத2ஞ்சந।
தோ3ஷோ யத்3யபி தஸ்ய ஸ்யாத் ஸதாமேதத3க3ர்ஹிதம் ॥

[நண்பனுடைய பா4வத்தோடு நெருங்கின இவ்விபீ4ஷணனை ஒருபொழுதும் கைவிடமாட்டேன். அவனிடம் தோ3ஷ

53. யஜு-காட3 7-5-36. 54. ரா-அ 16-27. 55. கீ3தை 7-18.
56. ரா-ப3ா 1-65. 57. ரா-யு 18-3.

மிருந்தாலும் இருக்கட்டுமே. நல்லோர்களுக்கு இவனை ஸ்வீகரிப்பது நிந்தி3க்கத்தக்கதல்ல.]

58. அபி4யாதா ப்ரஹர்த்தா ச ஸேநாநயவிஶாரத3:

[ராமபிரான் (எதிரியிருக்குமிடம்) சென்று சண்டை செய்பவர்; ஸைந்ய நீதிகளை நன்கறிந்தவர்.]

59. சி2ந்நம் பி4ந்நம் ஶரைர் த3க்3த4ம் ப்ரப4க்3நம் ஶஸ்த்ர பீடி3தம் ।
பூ3லம் ராமேண த3த்3ருஶு: ந ராமம் ஶீக்4ரகாரிணம் ॥

[ராக்ஷஸஸேனையானது அம்புகளால் வெட்டப்பட்டும், பிளக்கப்பட்டும், எரிக்கப்பட்டும், நன்கு உடைக்கப்பட்டும், துன்புறுத்தப்பட்டும் கிடப்பதை அனைவரும் கண்டனர். மிக வேக3மாகக் காரியம் செய்யும் ராமனைக் கண்டாரில்லை.]

60. அபிஷிச்ய ச லங்காயாம் ராக்ஷஸேந்த்3ரம் விபீ4ஷணம் ।
க்ருதக்ருத்யஸ்ததா3 ராமோ விஜ்வர: ப்ரமுமோத3 ஹ ॥

[லங்கையில் ராக்ஷஸ ராஜாவாக விபீ4ஷணனை அபி4ஷேகம் செய்து தன் காரியத்தைச் செய்துமுடித்தவனான ராமன், அப்போதே கவலை நீங்கப்பெற்று ஸந்தோஷித்தான்.]

61. கோ3விந்தே3தி யதா3க்ரந்த3த் க்ருஷ்ணா மாம் தூ3ரவாஸிநம் ।
ருணம் ப்ரவ்ருத்3த்4மிவ மே ஹ்ருத3யாந்நாபஸர்ப்பதி ॥

[த்3ரௌபதி3யானவள் வெகுதூரத்திலிருந்த என்னைக் குறித்து 'கோ3விந்தா3!' என்று கூக்குரலிட்டது (வட்டியினால்) மிக வளர்ந்த கடனைப்போல் என்னுடைய ஹ்ருத3யத்திலிருந்து அகலுகிறதில்லை.]

62. தம் து மே ப்4ராதரம் த்3ரஷ்டும் ப4ரதம் த்வரதே மந: ।
மாம் நிவர்த்தயிதும் யோऽஸௌ சித்ரகூடமுபாக3த: ॥
ஶிரஸா யாசதஸ்தஸ்ய வசநம் ந க்ருதம் மயா ॥

58. ரா-அ 1-29. 59. ரா-யு 94-22. 60. ரா-பா3 1-85.
61. பா4ர-உத்3யோ 47-22. 62. ரா-யு 124-19.



[என்னைத் திருப்பியழைத்துச்செல்ல எவனொருவன் சித்திரகூடத்திற்கு வந்தானோ, அந்த என்னுடைய தம்பியாகிய ப4ரதனைப் பார்க்க என் மனம் விரைகிறது. தலையாலே யாசித்த அவனுடைய வார்த்தை என்னால் செய்யப்படவில்லையே.]

63. வர்ஷாயுதைர் யஸ்ய கு3ணா ந ஶக்யா:
வக்தும் ஸமேதைரபி ஸர்வலோகை: ।
மஹாத்மந: ஶங்க2சக்ராஸிபாணேர்
விஷ்ணோர் ஜிஷ்ணோர் வஸுதே3வாத்மஜஸ்ய ॥

[மஹாபுருஷனும், ஶங்க2சக்ரங்கள் வாள் ஆகியவற்றைக் கையில் ஏந்தியிருப்பவனும், ஸர்வவ்யாபியும், ஜயஶீலனும். வஸுதே3வபுத்ரனுமான எவனுடைய கு3ணங்கள், பதினாயிரம் வருஷங்களிலும் எல்லா உலகங்களும் கூடியும் பேசமுடியாதவையோ.]

64. சதுர்முக2ாயுர் யதி3 கோடிவக்த்ரோ
ப4வேந்நர: க்வாபி விஶுத்3த4 சேதா: ।
ஸ தே கு3ணாநாமயுதைகதே3ஶம்
வதே3ந்ந வா தே3வவர ப்ரஸீத3 ॥

[பல ப்3ரஹ்மாக்களின் ஆயுளை உடையவனாய், கோடிக் கணக்கான முக2ங்களை உடையவனாய், மிகவும் ஶுத்3த4மான மனத்தையுடையவனான ஒரு மனிதன் இருப்பானேயாகில், அவன் உன்னுடைய கு3ணங்களில் பதினாயிரத்தில் ஒரு பங்கைச் சொல்லுவானோ மாட்டானோ அறியோம். தே3வர்களில் சிறந்தவனே! அருள் புரிய வேண்டும்.]

65. ஸ்ரக்3வஸ்த்ராப4ரணைர் யுக்தம் ஸ்வாநுரூபைரநூபமை: ।
சிந்மயை: ஸ்வப்ரகாஶைஶ்ச அந்யோந்யருசிரஞ்ஜகை: ॥

[தனக்குத் தகுந்தவையும், ஒப்பற்றவையும், ஞானமயமாயிருப்பவையும், ஸ்வயம் ப்ரகாஶமானவையும், ஒன்றுக்

63. பா4ர-பீ4ஷ்மபர்வம் கர்ணவாக்யம். 64. வராஹ 73-94.
65. பௌஷ்கரஸம்ஹிதை.

கொன்று (சேர்த்தியினுலுண்டான) காந்தியினுல் அழகாயிருப்பவையுமான மாலைகளோடும். வஸ்த்ரங்களோடும், ஆப4ரணங்களோடும் கூடியிருப்பது பரப்3ரஹ்மம்.]

66. ப4ாவஜ்ஞேந க்ருதஜ்ஞேந த4ர்மஜ்ஞேந ச லக்ஷ்மண ।
த்வயா புத்ரேண த4ர்மாத்மா ந ஸம்வ்ருத்த: பிதா மம ॥

[லக்ஷ்மணு! நினைவறிந்து காரியம் செய்பவனும், (த3ஶரத2 சக்ரவர்த்தி எனக்குச்) செய்யுமவற்றை அறிபவனும், (ஶேஷத்வ) தருமமறிந்தவனுமான உன்னைப் பிள்ளையாகப் பெற்ற த4ர்மாத்மாவான தந்தை எனக்கு இறக்கவில்லை.]

67. ப4வந்தமேவாநுசரந் நிரந்தரம்
ப்ரஶாந்த நிஶ்ஶேஷமநோரத2ாந்தர: ।
கத3ாऽஹமைகாந்திகநித்யகிங்கர:
ப்ரஹர்ஷயிஷ்யாமி ஸநாத2ஜீவித: ॥

[உன்னையே இடைவிடாமல் அனுஸரித்துக்கொண்டு மற்ற எல்லா ஆசைகளும் வாஸனையுமில்லாமல் நீங்கப்பெற்றவனுய், ஒருபடிப்பட்டதாய் நித்யமான கைங்கர்யத்தை உடையவனுய், ப்ரயோஜனத்துடன் கூடிய வாழ்வை உடையவனுய், என்று நான் (உன்னையே) மிகவும் உகப்பிக்கப்போகிறேன் ?.]

68. தம் பஞ்சஶதாந்யப்ஸரஸாம் ப்ரதி த4ாவந்தி ஶதம்
மாலா ஹஸ்தா:
ஶதமஞ்ஜநஹஸ்தா: ஶதம் சூர்ணஹஸ்தா: ஶதம்
வாஸோஹஸ்தா:
ஶதம் பணஹஸ்தாஸ் தம் ப்3ரஹ்மாலங்காரேணுலங்
குர்வந்தி ॥

[அந்த முக்த புருஷனிடம் ஐந்நூறு மதிமுக மடந்தையர் விரைகின்றனர்; நூற்றுவர் மாலையைக் கைக்கொண்டும், நூற்றுவர் மையைக் கைக்கொண்டும், நூற்றுவர் அஞ்ஜனப்பொடியைக் கைக்கொண்டும். நூற்றுவர் ஆடைகளைக்

66. ரா-ஆ 15-28. 67. ஸ்தோ-ர 46. 68. கௌஷீதகீ 1-34.



கைக்கொண்டும், நூற்றுவர் ஆப4ரணங்களைக் கைக்கொண்டும் அவனை ப்3ரஹ்மத்தின் அலங்காரத்தினுல் அலங்கரிக்கின்றனர்.]

69. முக்தாநாம் லக்ஷணம் ஹ்யேதத் யச்ச்2வேதத்3வீப-
வாஸிநாம் ।
நித்யாஞ்ஜலிபுடா ஹ்ருஷ்டா நம இத்யேவ வாதி3ந: ॥

[ஶ்வேதத்3வீபவாஸிகளுக்கு எது லக்ஷணமோ அதுவே முக்தர்களுக்கும் லக்ஷணமாகும்; அதாவது:— எப்போதும் அஞ்ஜலி செய்துகொண்டிருப்பார்கள் ; (அதனுல்) ஆநந்தி3ப்பார்கள்; வாயால் 'நம:' என்றே சொல்லும் தன்மையுடையவர்களாயிருப்பார்கள்.]

70. ஏதத் ஸாம க3ாயந்நாஸ்தே । ஹா வுஹா வுஹா வு ।
அஹமந்நமஹமந்நமஹமந்நம் । அஹமந்நாதே3ாऽஹ-
மந்நாதே3ாऽஹமந்நாத3: ॥

[முக்தாத்மா (பரமாத்மாவையடைந்து) இந்த ஸாமத்தைப் பாடிக்கொண்டிருக்கிருன்,— ஹா வுஹா வுஹா வு; நான் (பரமாத்மாவுகக்கும்) அன்னமாயிருப்பவன்; அன்னமாயிருப்பவன்; அன்னமாயிருப்பவன். நான் (பரமாத்மாவின் உகப்பாகிற) அன்னத்தை பு4ஜிப்பவன்; அன்னத்தை பு4ஜிப்பவன்; அன்னத்தை பு4ஜிப்பவன்.]

71. காரணம் து த்4யேய:

[காரணவஸ்துவே தியானிக்கத்தக்கது.]

72. யோ ப்3ரஹ்மாணம் வித3த4ாதி பூர்வம்
யோ வை வேத3ாம்ஶ்ச ப்ரஹிணோதி தஸ்மை ।
தம் ஹ தே3வமாத்மபு3த்3தி4ப்ரஸாத3ம்
முமுக்ஷுர் வை ஶரணமஹம் ப்ரபத்3யே ॥

[எவன் பிரமனை முன் படைத்தானே, எவன் வேத3ங்களையும் அவனுக்கு உபதே3ஶித்தானே, அப்படிப்பட்ட தே3வ

69. ப4ார-ஶாந்தி 344-45. 70. தை-ப்4ருகு3 10-6.
71. அதர்வஶிகை2. 72. ஶ்வே 6-18.

னும், தன் விஷயமான ஞானத்தை ப்ரகாசிப்பிப்பவனுமான பரமபுருஷனை, மோக்ஷமடைய விரும்பும் நான ஶரணமடைகிறேன்.]

73. அநந்யஸாத்4யே ஸ்வாபீ4ஷ்டே மஹாவிஶ்வாஸ பூர்வகம் ।
ததே3கோபாயதா யாச்ஞா ப்ரபத்தி: ஶரணாக3தி: ॥

[தன்னுடைய இஷ்டம் வேறொன்றாலுமாகாதபோது, மஹாவிஶ்வாஸத்தை முன்னிட்டுக்கொண்டு, அவனொருவனையே உபாயமாக இருக்கவேண்டுமென்று யாசிப்பது ப்ரபத்தி; அதுவே ஶரணாக3தி.]

74. காம்ய: ஸ்ப்ருஹா ஸ்மர: காம:

[காமஶப்3த3ம், காமிக்கப்படும் வஸ்துவையும், ஆசையையும், மன்மத2னையும் குறிக்கும்.]

75. ஶுகோ முக்தோ வாமதே3வோ விமுக்த:

ஶுகர் முக்தரானார்; வாமதே3வர் முக்தரானார்.]

76. வேதா3 மே பரமம் சக்ஷு: வேதா3 மே பரமம் த4நம் ।
வேதா3 மே பரமம் தா4ம வேதா3 மே ப்3ரஹ்ம சோத்தமம் ॥

[வேத3ங்களே எனக்கு உயர்ந்த கண்; வேத3ங்களே எனக்கு மேலான தனம்; மறைகளே எனக்கு மேலான தேஜஸ்; வேத3ங்களே எனக்கு உயர்ந்த ப்3ரஹ்மம்.]

77. ததை3க்ஷத ப3ஹுஸ்யாம் ப்ரஜாயேயேதி
தத்தேஜோऽஸ்ருஜத ।

[அந்தப் பரப்3ரஹ்மம் '(நானே) பலவாக ஆகக்கடவேன்' என்று ஸங்கல்பித்தது; அது தேஜஸ்ஸை ஸ்ருஷ்டி செய்தது.]

78. வைகுண்டே2 து பரே லோகே ஶ்ரியா ஸார்த்த4ம் ஜக3த்பதி: ।
ஆஸ்தே விஷ்ணுரசிந்த்யாத்மா ப4க்தைர் பா4க3வதைஸ்
ஸஹ ॥

73. பா4ரதமுனி; விஷ்வக்-ஸம். 74. வைஜயந்தீ-த்3வ்யக்ஷர 1-17.
76. பா4ர-ஶாந்தி 357 31. 77. சாந்-உப 6-2-3. 78. ஶிவபுராணம்.



[மேலான உலகமான வைகுண்ட2த்தில், ஜக3த்பதியும், நினைக்கவொண்ணாத ஸ்வரூபத்தை உடையவருமான விஷ்ணு, ப4க்தர்களுடனும், பா4க3வதர்களுடனும் கூடியவராய், ஸ்ரீதே3வியுடன் கூட எழுந்தருளியிருக்கிறார்.]

79. ஆநயைநம் ஹரிஶ்ரேஷ்ட2 த3த்தமஸ்யாப4யம் மயா ।
விபீ4ஷணோ வா ஸுக்3ரீவ! யதி3 வா ராவண: ஸ்வயம் ॥

[வானரர்களுள் சிறந்தவனான ஸுக்3ரீவனே! இவனை அழைத்துவா; விபீ4ஷணனாயிருந்தாலும், ராவணன்தானேயாயிருந்தாலும், இவனுக்கு என்னால் அப4யமளிக்கப் பட்டது.]

80. நாஹம் தே3வோ ந க3ந்த4ர்வோ ந யக்ஷோ ந ச தா3நவ: ।
அஹம் வோ பா3ந்த4வோ ஜாதோ நைதச்சிந்த்யமிதோऽந்-
யதா2 ॥

[நான் தே3வனல்லன்; க3ந்த4ருவனல்லன்; யக்ஷனல்லன்; அஸுரனுமல்லன்; நான் உங்களுக்கு உறவினனாகப் பிறந்திருக்கிறேன். என் பிறப்பு இதைத்தவிர வேறு விதமாக (உங்களால்) நினைக்கத்தக்கதல்ல.]

81. ஸகே2! ராக4வ! த4ர்மஜ்ஞ! ரிபூணாமபி வத்ஸல! ।
அப்4யநுஜ்ஞாதுமிச்சா2மி க3மிஷ்யாமி யதா2க3தம் ॥

[நண்பரே! ரகு4குலத்தில் உதி3த்தவரே! த4ர்மத்தை அறிந்தவரே! ஶத்ருக்களிடத்தும் வாத்ஸல்யத்தை உடையவரே! விடைபெற்றுக்கொள்ள விரும்புகிறேன். வந்தவாறே போய்விடுகிறேன்.]

82. ரூபௌதா3ர்யகு3ணை: பும்ஸாம் த்3ருஷ்டிசித்தாபஹாரிணம்

வடிவழகு, வண்மை, மற்ற கு3ணங்கள் ஆகியவற்றால் ஆண்களின் கண்ணையும் நெஞ்சையும் அபகரிக்கும் ராமனை.]

79. ரா-யு 18-34. 80. வி-பு 5-13-12. க்ருஷ்ணவாக்யம்.
81. ரா-யு 50-56. 82. ரா-அ 3-29.

83. ந த₄ர்மநிஷ்டோ₂ऽஸ்மி ந சாத்மவேதீ₃
ந ப₄க்திமாம்ஸ்த்வச்சரணாரவிந்தே₃।
அகிஞ்சநோऽநந்யக₃திஶ் ஶரண்ய!
த்வத்பாத₃மூலம் ஶரணம் ப்ரபத்₃யே ॥

[ஶரணமடையத்தகுந்த எம்பிரானே! (அடியேன்) கர்ம யோக₃த்தில் நிலைநின்றவன் அல்லேன்; ஜ்ஞானயோக₃த்தில் நிலைநின்றவனும் அல்லேன். உன் திருவடித்தாமரைகளில் ப₄க்தியை உடையவனும் அல்லேன்; ஒரு உபாயமுமற்றவனும் வேறு புகலற்றவனுமான அடியேன் உன் திருவடித் தாமரைகளை உபாயமாக நிச்சயிக்கிறேன்.]

84. ரகு₄வர! யத₃பூ₄ஸ்த்வம் தாத்₃ருஶோ வாயஸஸ்ய
ப்ரணத இதி த₃யாளுர் யச்ச சைத்₃யஸ்ய க்ருஷ்ண!।
ப்ரதிப₄வமபராத்₃து₄ர் முக்₃த₄! ஸாயுஜ்யதோ₃ऽபூ₄:
வத₃ கிமபத₃மாக₃ஸ்தஸ்ய தேऽஸ்தி க்ஷமாயா: ॥

[ரகு₄குலத்தில் மேலானவனை ராமனாக அவதரித்தவனே! அப்படிப்பட்ட (பெரும் பாவம் செய்த) காகாசுரன் விஷயத்தில், ஶரணாக₃தன் என்று நினைத்து அருளினையன்றோ. தோ₃ஷங்களை அறியாத க்ருஷ்ணனே! ஜந்மந்தோறும் அபராத₄ம் செய்த சேதி₃குலத்தவனான ஶிஶுபாலனுக்கு மோக்ஷம் கொடுத்தருளினையல்லவா. அப்படிப்பட்ட உன்னுடைய பொறுமையால் பொறுக்கத்தகாத பாபம் என்ன இருக்கிறது? அருளிச்செய்யவேணும்.]

85. 34-வது ப்ரமாணத்தைக் காண்க.

86. 55-வது ப்ரமாணத்தைக் காண்க.

87. மாத்ருதே₃வோ ப₄வ। பித்ருதே₃வோ ப₄வ।
ஆசார்யதே₃வோ ப₄வ। அதிதி₂தே₃வோ ப₄வ ॥

[தாயை தெய்வமாகக்கொள்; தந்தையை தெய்வமாகக் கொள்; ஆசாரியனை தெய்வமாகக்கொள்; அதிதி₂யை தெய்வமாகக்கொள்.]

---

83. ஸ்தோ-ர 22. 84. ஸ்தோ-ர 63. 87. தை-ஶீக்ஷா 11-2.



88. ஜிதந்தே புண்ட₃ரீகாக்ஷ! நமஸ்தே விஶ்வபா₄வந!।
நமஸ்தேஸ்து ஹ்ருஷீகேஶ! மஹாபுருஷ! பூர்வஜ! ॥

[செந்தாமரைக்கண்ணா! உன்னால் (இவ்வாத்ம வஸ்து) ஜயிக்கப்பட்டது; (இது) என்னுடையதல்லவே; உன்னுடையதாயிற்றே; உலகெல்லாம் உண்டாக்கினவனே! இந்திரியங்களை நியமிப்பவனே! கொடுப்பதில் சிறந்தவனே! முற்பாடனாகப் பிறப்பவனே! (இவ்வாத்மவஸ்து) எனக்காகை தவிர்ந்து உனக்கே ஆகவேணும்.]

89. கு₃ஶப்₃த₃ஸ் த்வந்த₄கார: ஸ்யாத் ருஶப்₃த₃ஸ்
தந்நிரோத₄க:।
அந்த₄கார நிரோதி₄த்வாத் கு₃ருரித்யபி₄தீ₄யதே ॥

['கு₃'ஶப்₃த₃ம் அந்த₄காரம் என்னும் பொருளையுடையது. 'ரு'ஶப்₃த₃ம் அதைத் தடுப்பது; அந்த₄காரத்தைத் தடுப்பவராகையால் ஆசாரியன் கு₃ருவெனப்படுகிறார்.]

90. லக்ஷ்மீநாத₂ஸமாரம்பா₄ம் நாத₂யாமுநமத்₄யமாம்।
அஸ்மதா₃சார்யபர்யந்தாம் வந்தே₃ கு₃ருபரம்பராம் ॥

[ஸ்ரீமந்நாராயணனுடன் தொடங்குவதும், நாத₂யாமுநர்களை நடுவாகக் கொண்டதும் நம்முடைய ஆசாரியருடன் முடிவதுமான கு₃ருபரம்பரையை வணங்குகிறேன்.]

91. உத்பாத₃கப்₃ரஹ்மபித்ரோர் க₃ரீயாந் ப்₃ரஹ்மத₃: பிதா

[பிறப்பித்த தந்தைக்கும் ப்₃ரஹ்மோபதே₃ஶம்செய்த தந்தைக்குமிடையே ப்₃ரஹ்மோபதே₃ஶம் செய்த தந்தை சிறந்தவன்.]

92. பித்ருமாத்ரு ஸுத ப்₄ராத்ரு தா₃ரமித்ராத₃யோऽபி வா।
ஏகைகப₂லலாபா₄ய ஸர்வலாபா₄ய கேஶவ: ॥

[தாய், தந்தை, மக்கள், உடன்பிறந்தோர், மனைவி, நண்பன் முதலிய அனைவரும் ஒவ்வொரு ப₂லனை அடைவதன் பொருட்டு ஆவர். கேஶவனோவென்னில் எல்லாப் ப₂லன்களை அடைவதன் பொருட்டு ஆவான்.]

---

88. ஜிதந்தே-1. 89. 90. கூரத்தாழ்வான் அருளிய தனியன்.
91. 92.

93. மந ஏவ மநுஷ்யாணும் காரணம் ப$_3$ந்த$_4$மோக்ஷயோ:।
ப$_3$ந்தா$_4$ய விஷயாஸங்கி$_3$ முக்த்யை நிர்விஷயம் மந:॥

[மனிதர்களுக்கு ஸம்ஸாரத்திற்கும் மோக்ஷத்திற்கும் மனது தான் காரணம். ஶப்$_3$த$_3$ாதி$_3$ விஷயங்களில் ஈடுபட்ட மனம் ஸம்ஸாரஹேதுவாகிறது. விஷயங்களில் பற்றற்ற மனம் முக்திஹேதுவாகிறது.]

94. யத் ப்$_3$ரஹ்மகல்பநியுதாநுப$_4$வேऽப்யநாஶ்யம்
தத் கில்பி$_3$ஷம் ஸ்ருஜதி ஜந்துரிஹ க்ஷணார்த்தே$_4$।

[யாதொரு பாபம், பல்லாயிரம் ப்$_3$ரஹ்மகல்பங்கள் அனுப$_4$வித்தாலும் நஶிக்காதோ, அந்தப் பாபத்தை இந்த ஜந்து இங்கு அரை க்ஷணநேரத்தில் செய்கிறான்.]

95. விது$_3$ஷோऽதிக்ரமே த$_3$ண்ட$_3$பூ$_4$யஸ்த்வம்

[ஞானியாயிருப்பவன் விதி$_4$யை மீறினுல் அவனுக்கு த$_3$ண்ட$_3$ம் அதி$_4$கமாகும்.]

96. ஶக்தஸ்யாதிவ தோ$_3$ஷவத்

[சக்தியுள்ளவன் சாஸ்திரவிதி$_4$யை அநுஷ்டி$_2$யாதிருந்தானுகில் தோ$_3$ஷம் அதி$_4$கமாகும்.]

97. தை$_3$வீ ஹ்யேஷா கு$_3$ணமயீ மம மாயா து$_3$ரத்யயா।
மாமேவ யே ப்ரபத்$_3$யந்தே மாயாமேதாம் தரந்தி தே॥

[தே$_3$வனுகிற என்னால் நிர்மிக்கப்பட்டதும், முக்குணங்களை உடையதுமான இந்த என்னுடைய மாயை தாண்ட அரிதானது. என்னையே எவர்கள் ஶரணமடைகிறார்களோ அவர்கள் இந்த மாயையைத் தாண்டுகிறார்கள்.]

98. சதுர்வித$_4$ா ப$_4$ஜந்தே மாம் ஜநாஸ் ஸுக்ருதிநோऽர்ஜுந।
ஆர்த்தோ ஜிஜ்ஞாஸுரர்த்தா$_2$ர்த்தீ$_2$ ஜ்ஞாநீ ச ப$_4$ரதர்ஷப$_4$॥

---

93. வி-பு 6-7-28. 94. ஸ்ரீவைகுண்ட$_2$ஸ்தவம்-60. 95. 96.
97. கீ$_3$தை 7-14. 98. கீ$_3$தை 7-13.



[அர்ஜுன! புண்யஶாலிகளான நான்கு வகைப்பட்ட ஜனங்கள் என்னிடம் ப$_4$க்திசெய்கிறார்கள். அவர்களாவார்,—(செல்வத்தையிழந்து) வருந்துமவன், (புதிய செல்வத்தை) விரும்புமவன், ஆத்மஸ்வரூபத்தை அடைய விரும்புமவன், ப$_4$க$_3$வானையே அடையவிரும்பும் ஞானி என்பவர்கள்.]

99. மாதா பிதா ப்$_4$ராதா நிவாஸஶ் ஶரணம்
ஸுஹ்ருத் க$_3$திர் நாராயண:

[நாராயணன் தாயாகவும், தந்தையாகவும், தன்னுடன் பிறந்தவனாகவும், தங்குமிடமாகவும், மோக்ஷோபாயமாகவும், நண்பனாகவும், மோக்ஷத்தில் அடையப்படுமவனாகவுமிருப்பவன்.]

100to103. ஆத்$_4$யாத்மிகாதி$_3$ மைத்ரேய ஜ்ஞாத்வா
தாபத்ரயம் பு$_3$த$_4$:।
உத்பந்ந ஜ்ஞாநவைராக்$_3$ய: ப்ராப்நோத்யாத்யந்திகம் லயம்॥
ஆத்$_4$யாத்மிகோऽபி த்$_3$விவித$_4$: ஶாரீரோ மாநஸஸ் தத$_2$ா।
ஶாரீரோ ப$_3$ஹுபி$_4$ர் பே$_4$தை$_3$ர் பி$_4$த்$_3$யதே ஶ்ரூயதாம் ச ஸ:॥
ஶிரோரோக$_3$ ப்ரதிஶ்யாய ஜ்வர ஶூலப$_4$க$_3$ந்த$_4$ரை:।
கு$_3$ல்மார்ஶ ஶ்வயது$_2$ ஶ்வாஸச்ச$_2$ர்த்$_3$யாதி$_3$பி$_4$ரநேகத$_4$ா॥
தத$_2$ாக்ஷிரோக$_3$ாதிஸார குஷ்ட$_2$ாங்க$_3$ாமய ஸம்ஜ்ஞிதை:।
பி$_4$த்$_3$யதே தே$_3$ஹஜஸ் தாபோ மாநஸம் ஶ்ரோதுமர்ஹஸி॥
காம க்ரோத$_4$ ப$_4$யத்$_3$வேஷ லோப$_4$மோஹ விஷாத$_3$ஜ:।
ஶோகாஸூயாவமாநேர்ஷ்யா மாத்ஸர்யாதி$_3$மயஸ் தத$_2$ா॥
மாநஸோऽபி த்$_3$விஜஶ்ரேஷ்ட$_2$ தாபோ ப$_4$வதி நைகத$_4$ா।
இத்யேவமாதி$_3$பி$_4$ர் பே$_4$தை$_3$ஸ் தாபோ
ஹ்யாத்$_4$யாத்மிக: ஸ்ம்ருத:॥
பஶு பக்ஷி மநுஷ்யாத்$_3$யை: பிஶாசோரக$_3$ராக்ஷஸை:।
ஸரீஸ்ருபாத்$_3$யைஶ்ச ந்ருணாம் ஜாயதே சாதி$_4$பௌ$_4$திக:॥
ஶீத வாததோஷ்ண வர்ஷாம்பு$_3$ வைத்$_3$யுதாதி$_3$ ஸமுத்$_3$ப$_4$வ:।
தாபோ த்$_3$விஜவரஶ்ரேஷ்டை$_2$: கத்$_2$யதே சாதி$_4$தை$_3$விக:॥

---

 99. ஸுபா$_3$லோபநிஷத்-16. 100...103. வி-பு 6-5-1...8.

[மைத்ரேயரே! ஆத்4யாத்மிகம் முதலான மூன்று தாபங்களையும் அறிந்த வித்3வானானவன், ஜ்ஞானவைராக்3யங்கள் உண்டாகப்பெற்றவனாய், மோக்ஷமடைகிறான். ஆத்4யாத்மிகமானது, — ஶரீரத்திலுண்டாவது (வ்யாதி4) என்றும், மநஸ்ஸிலுண்டாவது (ஆதி4) என்றும் இருவகைப்படும். ஶரீரத்திலுண்டாகும் வ்யாதி4யானது பல பிரிவுகளையுடையது; அதைக் கேட்பீராக. தலைவலி, ப்ரதிஶ்யாயம் (பீநஸம்), ஜ்வரம், ஶூலம், ப4க3ந்த4ரம், கு3ல்மார்ஶம், ஶ்வயது2 (ஶோபம்), ஶ்வாஸச்சர்த்தி3 முதலான பல வகைப்பட்டது. அப்படியே கண்நோய், அதிஸாரம், குஷ்ட2ம், அங்க3வ்யாதி4 என்னும் பல பெயர்களுடன் வியாதியானது வேறுபடுகிறது. மநஸ்ஸிலுண்டாகும் ஆதி4யைப்பற்றிக் கேட்பீராக. காமம், கோபம், ப4யம், விரோத4ம், பேராசை, துன்பம் ஆகியவற்றினாலுண்டாகும் கவலை, அஸூயை, அவமானம், பொறாமை, மாத்ஸர்யம் முதலானவையாக மநஸ்ஸிலுண்டாகும் தாபமும் பலபடிப் பட்டிருக்கிறது. ஆத்4யாத்மிகதாபமானது இப்படிப்பட்ட பே4தங்களை உடையதாகச் சொல்லப்படுகிறது. ப்ராணிகள், பக்ஷிகள் மநுஷ்யர்கள் முதலியவற்றாலும், பிஶாசம், பாம்புகள், ராக்ஷஸர்கள் முதலியவற்றாலும், ஊர்வன முதலியவற்றாலும் மனிதர்களுக்கு ஆதி4பௌ4திகமான தாபம் உண்டாகிறது. குளிர், காற்று, வெப்பம், மழை, ஜலம், மின்னல் முதலானவற்றால் உண்டாகும் தாபம் ஆதி4தை3விகம் என்று ப்3ராஹ்மண ஶ்ரேஷ்ட2ர்களால் சொல்லப்படுகிறது.

**104. ஸைஷா பா4ர்க3வீ வாருணீ வித்3யா । பரமே வ்யோமந் ப்ரதிஷ்டி2தா ।**

[வருணனால் ப்4ருகு3வுக்குச் சொல்லப்பட்ட இந்த வித்3யை பரமபத3த்தில் நிலைநிற்கிறது.]

**105. 70-வது ப்ரமாணத்தைப் பார்க்கவும்.**

104. தை-ப்4ருகு3-6.



**106. ப்ராயஶ: பாபகாரித்வாத் ம்ருத்யோருத்3விஜதே ஜந: ।
க்ருதக்ருத்யா: ப்ரதீக்ஷந்தே ம்ருத்யும் ப்ரியமிவாதிதி2ம் ॥**

[பெரும்பாலும், பாபம் செய்பவனாயிருப்பதாலேயே மனிதன் மரணத்தைக் கண்டு ப4யப்படுகிறான். செய்யவேண்டியதைச் செய்தவர்கள் மரணத்தை இனியவனான விருந்தாளியைப்போலே எதிர்பார்க்கிறார்கள்.]

**107. ப்ராப்ய புண்யக்ருதாந் லோகாநுஷித்வா ஶாஶ்வதீ: ஸமா: ।
ஶுசீநாம் ஶ்ரீமதாம் கே3ஹே யோக3ப்4ரஷ்டோऽபி4ஜாயதே ॥**

[யோக3த்திலிருந்து நழுவினவன் புண்ணியம் செய்தவர்களுடையவும் லோகங்களை அடைந்து பல வருடங்கள் வாழ்ந்து, ஶுத்3த4ர்களாய் தகுதியுள்ளவர்களாயிருப்பாருடைய வீட்டில் பிறக்கிறான்.]

**108. ஸ து மேதா4விநௌ த்3ருஷ்ட்வா வேதே3ஷு பரிநிஷ்டி2தௌ ।
வேதோ3பப்3ரும்ஹணார்த்தா2ய தாவக்3ராஹயத ப்ரபு4: ॥**

[அந்த வால்மீகிப4க3வான்—மேதா4விகளாய், வேத3ங்களில் தேர்ந்தவர்களான அவர்களைக்கண்டு, வேத3த்தை விவரிப்பதற்காக அவர்களுக்கு (ராமாயணத்தைச்) சொல்லி வைத்தார்.]

**109. இதிஹாஸ புராணம் பஞ்சமம்**

[இதிஹாஸ புராணங்கள் ஐந்தாவது வேத3மாகும்.]

**110. ப4க்த்யா த்வநந்யயா ஶக்ய அஹமேவம்விதோ4ऽர்ஜுந ।
ஜ்ஞாதும் த்3ரஷ்டும் ச தத்த்வேந ப்ரவேஷ்டும் ச பரந்தப ॥**

[அர்ஜுனா! எதிரிகளை அழிப்பவனே! ஒரு பலனை எதிர்பாராத ப4க்தியினாலேயே இம்மாதிரியான நான், உண்மையாக அறிவதற்கும், பார்ப்பதற்கும், நுழைவதற்கும் தக்கவன்.]

106. இதிஹாஸஸமுச்சயம் 7-38. 107. கீ3தை 6-42.
108. ரா-பா3 4-6. 109. சா2ந் 7-2. 110. கீ3தை 11-54.

111. ஆராத$_4$நாநாம் ஸர்வேஷாம் விஷ்ணோராராத$_4$நம் பரம்।
தஸ்மாத் பரதரம் ப்ரோக்தம் ததீ$_3$யாராத$_4$நம் பரம்॥

[எல்லா ஆராத$_4$நங்களுக்குள்ளும் விஷ்ணுவை ஆராதி$_4$ப்பது சிறந்ததாகும். அதிலும் வேறுபட்டதான அவனடியார்களை ஆராதி$_4$ப்பது அதிலும மிகச்சிறந்ததாகச் சொல்லப்படுகிறது.]

112. ஸோऽஶ்நுதே ஸர்வாந் காமாந் ஸஹ ப்$_3$ரஹ்மணா
விபஶ்சிதா

[முக்தன் எல்லாக் கல்யாணகு$_3$ணங்களையும், ஸர்வஜ்ஞனை ப்$_3$ரஹ்மத்துடன் கூட அனுப$_4$விக்கிறான்.]

113. யேந யேந த$_4$ாதா க$_3$ச்ச$_2$தி தேந தேந ஸஹ க$_3$ச்ச$_2$தி।
தத்$_3$ யத$_2$ா தருணவத்ஸா வத்ஸம் வத்ஸோ வா மாதரம்
ச$_2$ாயா வா ஸத்வமநுக$_3$ச்சே$_2$த் தத$_2$ாப்ரகாரம்॥

[எப்படி, இளங்கன்றையுடைய பசு கன்றையும், கன்று பசுவையும், நிழல் பிராணியையும் பின்தொடர்கின்றனவோ அப்படியே எப்படி எப்படிப் பரமபுருஷன் செல்கின்றானோ, அப்படி அப்படியே (முக்தனும்) கூடப்போகிறான்.]

114. அவித்$_3$யாஸ்மிதாபி$_4$நிவேஶராகத்$_3$வேஷா: பஞ்ச
க்லேஶா:।

[அவித்$_3$யை, அஹங்காரம், பேராசை, விருப்பம், கோபம் இவ்வைந்தும் க்லேஶங்கள்.]

115. உபர்யுபர்யப்$_3$ஜபு$_4$வோऽபி பூருஷாந்
ப்ரகல்ப்ய தே யே ஶதமித்யநுக்ரமாத்।
கி$_3$ரஸ் த்வதே$_3$கைககு$_3$ணாவதீ$_4$ப்ஸயா
ஸதா$_3$ ஸ்தி$_2$தா நோத்$_3$யமதோऽதிஶேரதே॥

[ப்$_3$ரஹ்மாக்களுக்கு மேலும் மேலும் "தே யே ஶதம்" என்று அடிக்கடி படிப்பதன்மூலம் ப்$_3$ரஹ்மாக்களைக் கற்

111.  112. தை-ஆ 1-2.  113. பரமஸம்ஹிதை.
114. பாதஞ்ஜலயோகஸூத்ரம் 2-3.  115. ஸ்தோ-ர-19.



பித்து, உன்னுடைய ஒவ்வொரு கு$_3$ணத்தினுடையவும் எல்லையைக் காண்கையிலே இச்சை$_2$யாலே, எப்போதும் இருக்கின்றவையான வேத$_3$வாக்கியங்களானவை, ஆரம்ப$_4$ த$_3$ஶையைக் கடந்து மேல் செல்லவில்லை.]

116. யத$_2$ா ஸந்நிதி$_4$மாத்ரேண க$_3$ந்த$_4$: க்ஷோப$_4$ாய ஜாயதே।
மநஸோ நோபகர்த்ருத்வாத் தத$_2$ாऽஸௌ பரமேஶ்வர:॥

[தான் விகாரமடையாமலிருந்தபோதிலும், மணம் தான் அருகிலிருப்பதன்மூலமே எப்படி மனஸ்ஸைக் கலக்குகின்றதோ, அப்படியே பரமேஶ்வரனும் தான் விகாரமடையாமல் பிற வஸ்துக்களை விகாரமடையச் செய்கிறான்.]

117. ஜ்யோதீம்ஷ்யாதி$_3$த்யவத்$_3$ராஜந் குரூந் ப்ரச்ச$_2$ாத$_3$யந் ஶ்ரியா

[ஸ்ரீக்ருஷ்ணப$_4$க$_3$வான், கௌரவர்களைத் தன் தேஜஸ்ஸாலே ஸூர்யன் மற்ற சோதிகளைப்போல மழுங்கச் செய்து கொண்டு(வந்தார்.)]

118. ஸம்ஸ்மராம்யஸ்ய வாக்யாநி ப்ரியாணி மது$_4$ராணி ச।
ஹ்ருத்$_3$யாந்யம்ருதகல்பாநி மந:ப்ரஹ்லாத$_3$நாநி ச॥

[பிரியமாயும், இனியவையாயும், ஹ்ருத$_3$யத்திலிருந்து வெளிவருபவையாயும், அம்ருதம் போன்றவையாயும், மனத்தை உகப்பிப்பவையாயுமுள்ள இந்த ப$_4$ரதனுடைய வாக்கியங்களை நினைக்கிறேன்.]

119. வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ப்$_4$ருஶம் ப$_4$வதி து$_3$:க்கி$_2$த:।
உத்ஸவேஷு ச ஸர்வேஷு பிதேவ பரிதுஷ்யதி॥

[(ராமன்) மனுஷ்யர்களுடைய து$_5$:க்க$_2$ங்களில், (அவர்களைக் காட்டிலும்) அதி$_4$கமாக து$_3$க்கி$_2$க்கிறான். (அவர்களுடைய) எல்லா உத்ஸவங்களிலும் தந்தையைப்போல் ஆனந்த$_3$ப் படுகிறான்.]

120. இயம் ஸா யத்க்ருதே ராமஶ் சதுர்ப்பி$_4$: பரிதப்யதே।
காருண்யேநாந்ருஶம்ஸ்யேந ஶோகேந மத$_3$நேந ச॥

116. வி-பு 1-2-30.  117. ப$_4$ார-உத்$_3$ 94-45.  118. ரா-ஆ 16-39.
119. ரா-அ 2-40.  120. ரா-ஸு 15-49 & 50.

ஸ்த்ரீ ப்ரணஷ்டேதி காருண்யாத்₃ஆஶ்ரிதேத்யாந்ருஶம்
ஸ்யத:।
பத்நீ நஷ்டேதி ஶோகேந ப்ரியேதி மத₃நேந ச ॥

[எவளுக்காக ஸ்ரீராமபிரான் கருணை, இரக்கம், ஶோகம், காமம் என்னும் நான்கினாலும் வருந்துகிறாரோ அந்த ஸீதை இவளே. (ஸ்ரீராமபிரான்) 'ஒரு பெண்பிள்ளை அபஹ்ரிக்கப்பட்டாளே' என்னும் கருணையினாலும், 'நம்மைச் சேர்ந்தவள் (அபஹரிக்கப்பட்டாளே)' என்னும் இரக்கத்தாலும், 'நம்முடைய மனைவி நஷ்டமாயினளே' என்னும் ஶோகத்தினாலும், 'நமக்கு இனியவள் (அபஹரிக்கப்பட்டனளே)' என்னும் காமத்தினாலும் (வருந்துகிறார்).]

121. பி₃பே₄த₃ ச புநஸ் ஸாலாந் ஸப்தைகேந மஹேஷுணா।
கி₃ரிம் ரஸாதலம் சைவ ஜநயந் ப்ரத்யயம் தத₃ா ॥

[(துந்துபியின் எலும்பை எறிந்த பிறகு) மறுபடியும் ஸுக்₃ரீவனுக்கு நம்பிக்கையுண்டாவதற்காக, ஏழு ஸால மரங்களையும், மலையையும், ரஸாதலத்தையும் ஒரு பெரிய அம்பினாலே பிளந்தான் ராமன்.]

122. அப்₃தி₄ம் ந தேரித₂ ந ஜிக்₃யித₂ ராக்ஷஸேந்த்₃ரம்
நைவாஸ்ய ஜிஜ்ஞித₂ யதா₂ ச ப₃லாப₃லம் த்வம்।
நிஸ்ஸம்ஶயஸ் ஸபதி₃ தஸ்ய பதே₃ऽப்₄யஷிஞ்சஸ்
தஸ்யாநுஜம் கத₂மித₃ம் ஹி விபீ₄ஷணஞ்ச ॥

[எம்பிரானே! நீ கடலையும் கடக்கவில்லை; ராக்ஷஸாதி₄பதியை ஜயிக்கவுமில்லை; அவனுடைய ப₃லாப₃லங்களைக் கூட அறியவில்லை; அப்படியிருக்கும்போது அவன் தம்பி விபீ₄ஷணனை உடனே எப்படி அவனுடைய ஸ்தா₂னத்தில் ஜயமின்றியே அபி₄ஷேகம் பண்ணிவைத்தாய்?]

123. ப்ரஹர்த்தாரம் ஶரீரேஷு ந தே பஶ்யந்தி ராக₄வம்।
இந்த்₃ரியார்த்தே₂ஷு திஷ்ட₂ந்தம் பூ₄தாத்மாநமிவ ப்ரஜா: ॥

121. ரா-பா₃ 1-66. 122. அதிமாநுஷஸ்தவம்-24.
123. ரா-யு 94-23.



[தங்கள் ஶரீரத்திலே அடிக்கும் ராக₄வனை அந்த ராக்ஷஸர்கள் காணவில்லை. (எதுபோலவென்னில்:) இந்திரிய விஷயங்களை அநுப₄விக்கும் பஞ்சபூ₄தாத்மாவான ஜீவாத்மாவை மனிதர்கள் காணாததுபோலே.]

124. இத₃ம் ஜ்ஞாநமுபாஶ்ரித்ய மம ஸாத₄ர்ம்யமாக₃தா:।
ஸர்க்கே₃ऽபி நோபஜாயந்தே ப்ரளயே ந வ்யத₂ந்தி ச ॥

[இந்த ஞானத்தை அடைந்து, என்னைப்போல் ஆனவர்கள் ஸ்ருஷ்டி காலத்திலும் பிறப்பதில்லை; ப்ரளயகாலத்திலும் அழிவதில்லை.]

125. ப்ரமாணத்திரட்டில் 208-ம் பக்கத்தில் 28-வது இலக்கமிட்டு அச்சிடப்பட்டிருக்கும் ப்ரமாணம் காண்க.

126. அஹமஸ்யாவரோ ப்₄ராதா கு₃ணைர் தா₃ஸ்யமுபாக₃த:

[நான் இவருடைய நினைவினால் (இவருக்குத்) தம்பி; (உண்மையில்) இவருடைய கு₃ணங்களால் அடிமைப் பட்டவன்.]

127. 36-வது ப்ரமாணம் காண்க.

128. கிம் சைநாம் ப்ரதிவக்ஷ்யாமி க்ருத்வா விப்ரியமீத்₃ருஶம்।
யதா₃ யதா₃ ஹி கௌஸல்யா தா₃ஸீவச்ச ஸகீ₂வ ச ॥
பா₄ர்யாவத் ப₄கி₃நீவச்ச மாத்ருவச்சோபதிஷ்ட₂தி ॥

[கௌஸல்யை தா₃ஸியைப்போலும், ஸகி₂யைப்போலும், மனைவியைப்போலும், ஸஹோத₃ரியைப்போலும், தாயைப் போலும் ஶுஶ்ரூஷை செய்யும்போதெல்லாம், இப்படிப் பட்ட அநிஷ்டமான காரியத்தைச் செய்துவிட்டு அவளுக்கு என்ன பதில் சொல்லுவேன்?]

128 A. ஶமோ த₃மஸ் தபஶ்ஶௌசம் க்ஷாந்திரார்ஜவமேவ ச।
ஜ்ஞாநம் விஜ்ஞாநமாஸ்திக்யம் ப்₃ராஹ்மம் கர்ம
ஸ்வபா₄வஜம் ॥

124. கீ₃தை 14-2. 126. ரா-கி 4-12. 128. ரா-அ 12-68.
128 A. கீ₃தை 18-42.

[வெளியிந்திரியங்களையும், மனஸ்ஸையும் (முறையே) அடக்குவதாகிற ஶமத3மங்கள், காயக்லேஶ ரூபமான தவம், பரிஶுத்3தி4, பொறுமை, நேர்மை, ஞானம, விஶேஷ மான ஞானம், ஆஸ்திகத்தன்மை ஆகிய இவை ப்3ராஹ்ம ணனுக்கு இயற்கையிலுள்ளவை.]

**129. அஹமஸ்ம்யபராத4நாமாலயோऽகிஞ்சநோऽக3தி: ।**
**த்வமேவோபாயபூ4தோ மே ப4வேதி ப்ரார்த்த2நாமதி: ॥**
**ஶரணாக3திரித்யுக்தா ஸா தே3வேऽஸ்மிந் ப்ரயுஜ்யதாம் ॥**

["நான் குற்றங்களுக்கு ஓர் இருப்பிடமாயிருக்கிறேன். (என்னை ரக்ஷித்துக்கொள்ள) ஓர் உபாயமுமற்றவனாயிருக் கிறேன்; (உன்னையொழிய) வேறு க3தியில்லாதவனாக இருக்கிறேன். நீயே எனக்கு உபாயமாக ஆவாயாக" என்று ப்ரார்த்தி2க்கும் பு3த்3தி4யே ஶரணாக3தி எனப்படு கிறது. அது இந்த ப4க3வான் விஷயத்தில் செய்யப் படட்டும்.]

**130. தா3ருண்யக்3நிர் யதா2 தைலம் திலே தத்3வத் புமாநபி ।**
**ப்ரதா4நேऽவஸ்தி2தோ வ்யாபீ சேதநாத்மாऽऽத்மவேத3ந: ॥**

[அறிவதையே ஸ்வரூபமாக உடையவனும், தனக்குத் தானே பிரகாஶிப்பவனுமான ஜீவன், அரணிக்கட்டையில் நெருப்புபோலவும், எள்ளினுள் எண்ணைபோலவும் ப்ரக்ருதி யினுள் மறைந்து நிற்கிறான்.]

**131. மாயாந்து ப்ரக்ருதிம் வித்3யாந்மாயிநந்து மஹேஶ்வரம்**

[ஆஶ்சர்யமான ஸ்ருஷ்டிக்கு ஹேதுவாயிருப்பதால் மாயை ப்ரக்ருதி என்றும், அந்த மாயையைத் தூண்டுபவனை மஹேஶ்வரனென்றும் அறியக்கடவன்.]

**132. 34-வது ப்ரமாணம் காண்க.**

**133. ஸஸுராஸுரக3ந்த4ர்வம் ஸயக்ஷோரக3ராக்ஷஸம் ॥**
**ஜக3த்3வஶே வர்த்ததேத3ம் க்ருஷ்ணஸ்ய ஸசராசரம் ॥**

---

129. அஹிர்-ஸம்ஹிதை 37-30. 130. வி-பு 2-7-28.
131. ஶ்வே 4-10. 133. ஸஹஸ்ரநாமாத்4யாயம்.



[தே3வர், அஸுரர், க3ந்த4ர்வர்களோடு கூடியதும், யக்ஷர், நாக3ர், ராக்ஷஸர்களுடன் சேர்ந்ததும், அசையக்கூடியதும், அசையக்கூடாததும் சேர்ந்ததுமான இந்த உலகம் கிருஷ்ணனின் வஶத்திலிருக்கிறது.]

**134. நித்யோ நித்யாநாம் சேதநஶ் சேதநாநாம்**
**ஏகோ ப3ஹூநாம் யோ வித3தா4தி காமாந்**

[நித்யர்களான பல ஜீவர்களுக்கு, நித்யனான யாவனொரு பரமசேதனன் விருப்பங்களை அளிக்கின்றானோ.]

**135. அசேதநா பரார்த்தா2 ச நித்யா ஸததவிக்ரியா ॥**
**த்ரிகு3ணா கர்மிணாம் க்ஷேத்ரம் ப்ரக்ருதே ரூபமுச்யதே ।**

[அறிவற்றதென்றும், பிறருக்காகவேயிருப்பதென்றும், ஸ்வ ரூபநாஶமற்றதென்றும், எப்போதும் மாறுபாடடைந்து கொண்டேயிருப்பதென்றும், ஸத்வரஜஸ்தமோ கு3ணங்களை உடையதென்றும், கர்மங்களைச் செய்யும் ஜீவர்கள் ஸுகத்தை யனுப4விக்குமிடமாயிருப்பதென்றும் ப்ரக்ருதியின் ஸ்வரூபம் சொல்லப்படுகிறது.]

**136. நாநாத்மாநோ வ்யவஸ்தா2த:**

[ஸுக2து3:க்க2ாதி3பே4த3ம் காணப்படுவதால் ஆத்மாக்கள் பலர் உள்ளனர் என்று ஸித்3தி4க்கிறது.]

**137. க்லேஶகர்மவிபாகாஶயைரபராம்ருஷ்ட:**
**புருஷவிஶேஷ ஈஶ்வர:**

[க்லேஶம், கர்மம், விபாகம், ஆஶயம் ஆகிய வற்றால் தொடப்படாதானொரு புருஷன் ஈஶ்வரனாவான்.]

**138. ஸதி மூலே தத்3விபாகா ஜாத்யாயுர்போ4கா3:**

[க்லேஶரூபமான காரணமிருக்கும்போது அதன் ப2லமான ஜாதி, ஆயுஸ், போ4க3ம் என்பவையும் உண்டாகின்றன.]

---

134. கட2 2-5-13; ஶ்வே 6-13. 135. பரமஸம்ஹிதை 2.
136. வைஶேஷிகஸூத்ரம் 3-2-20. 137. பாதஞ்ஜலஸூத்ரம் 1-24.
138. பாதஞ்ஜலஸூத்ரம் 2-13.

139. ஆஶயோ நாம வாஸநா

[ஆஶயமென்பது வாஸனையாகும்.]

140. ஏவம்ப்ரகாரமமலம் நித்யம் வ்யாபகமக்ஷயம் ।
ஸமஸ்தஹேயரஹிதம் விஷ்ணவாக்2யம் பரமம் பத3ம் ॥

[இப்படிப்பட்ட விஷ்ணுவின் பரமப்ராப்யமான ஸ்வரூபம், அழுக்கற்றதாயும், நித்யமாயும், ஸர்வவ்யாபியாயும், குறை வற்றதாயும், தாழ்வொன்றுமில்லாததாயுமிருக்கிறது.]

141. பராஸ்ய ஶக்திர் விவிதை4வ ஶ்ரூயதே
ஸ்வாப4ாவிகீ ஜ்ஞாநப3லக்ரியா ச ।

[இந்தப் பரமாத்மாவுக்குப் பலபடிப்பட்டதும், மேலானதுமான ஶக்தியும், இயற்கையான ஞானமும், ப3லமும், (ஸ்ருஷ்டித்தல் முதலிய) காரியங்களும் உண்டென்று அறியப்படுகிறது.]

142. த இமே ஸத்யா: காமா:

[அப்படிப்பட்ட இந்த ப4க3வத்3கு3ணங்கள் என்றுமிருப்பவை.]

143. யதோ வாசோ நிவர்த்தந்தே। அப்ராப்ய மநஸா ஸஹ।
ஆநந்த3ம் ப்3ரஹ்மணோ வித்3வாந்। ந பி3பே4தி
குதஶ்சநேதி ॥

[எந்த ப்3ரஹ்மத்தினிடமிருந்து, மனத்துடன் கூடிய வாக்குகள், (அதை) அளவிட்டறியமுடியாமல் திரும்புகின்றனவோ, அந்தப் பரமாத்மாவின் ஆநந்த3த்தை அறிந்தவன் எதனிடமும் ப4யப்படமாட்டான்.]

144. ஸ தா3தா4ர ப்ருதி2வீம் த்3யாமுதேமாம்

[அந்தப் பரமாத்மா இந்த பூ4மியையும் தே3வலோகத்தையும் த4ரித்து நிற்கிருன்.]

---

140. வி-பு 1-22-53. 141. ஶ்வே 6. 142. சா2ந் 8-3-1.
143. தை-ஆ 9-1. 144. தைத்-ஸம் 4-2.



145. அத2வா ப3ஹுநைதேந கிம் ஜ்ஞாநேந தவார்ஜுந।
விஷ்டப்4யாஹமித3ம் க்ருத்ஸ்நமேகாம்ஶேந
ஸ்தி2தோ ஜக3த் ॥

[அர்ஜுந! இந்த ஞானத்தைப் பற்றிப் பல சொல்லியென்? நான் இவ்வுலகமெல்லாவற்றையும் என் ஶக்தியில் ஒரு சிறு பகுதியாலே த4ரித்து நிற்கிறேன்.]

146. க்ஷரம் ப்ரத4ாநமம்ருதாக்ஷரம் ஹர:
க்ஷராத்மாநாவீஶதே தே3வ ஏக:

[க்ஷரமெனப்படுவது ப்ரக்ருதியே; அம்ருதமாகையால் அக்ஷரமெனப்படுபவன் ஜீவனே. ப்ரக்ருதிஜீவர்களை ஒரு தே3வன் நியமிக்கிருன்.]

147. ந ஶ்ரமோ ந ச கே2த3ஸ் தே ஜக3த்3த4ாரணஶாஸநே

[ஜக3த்தை த4ரிப்பதிலும், நியமிப்பதிலும் உமக்கு ஶ்ரமமுமில்லை; து3:க்க2முமில்லை.]

148. ந ஹி பாலநஸாமர்த்2யம்ருதே ஸர்வேஶ்வரம் ஹரிம்।
ஸ்தி2தௌ ஸ்தி2தம் மஹாப்ராஜ்ஞ ப4வத்யந்யஸ்ய
கஸ்யசித் ॥

[மஹாபு3த்3தி4மானே! ரக்ஷணத்தில் நிலைநிற்கும் ஸர்வேஶ்வரனை ஹரியைத் தவிர வேறு எவனுக்கும் ரக்ஷிக்க ஸாமர்த்2யம் கிடையாதன்றே.]

149. சேஷ்டா தஸ்யாப்ரமேயஸ்ய வ்யாபிநோऽவ்யாஹதாத்மிகா

[அளத்தற்கரிய ஸர்வவ்யாபியான அவனுடைய செயல் தடையற்றதாகும்.]

150. ரகாராதீ3நி நாமாநி ராமத்ரஸ்தஸ்ய ராவண।
ரத்நாநி ச ரதா2ஶ்சைவ த்ராஸம் ஸஞ்ஜநயந்தி மே॥

[ராவணு! ராமனிடம் ப4யந்த எனக்கு 'ர' என்னும் எழுத்தில் ஆரம்பி4க்கும் ரத்நங்கள், ரத2ங்கள் முதலிய நாமங்களும் ப4யத்தை விளைக்கின்றன.]

---

145. கீ3தை 10-42. 146. ஶ்வே 1-10. 147.
148. வி-பு 1-22-21. 150. ரா-ஆ 39-17.

151. ந தஸ்யேஶே கஶ்சந தஸ்ய நாம மஹத்3 யஶ:
[அப்பரமாத்மாவை நியமிப்பவன் ஒருவனுமில்லை; அவன் ஒருவனுக்கே பெருங்கீர்த்தியுள்ளது.]

152. தவாநந்தகு3ணஸ்யாபி ஷடே3வ ப்ரத2மே கு3ணா:।
யைஸ் த்வயேவ ஜக3த் குக்ஷாவந்யேऽப்யந்தர் நிவேஶிதா:॥
[ப4க3வானே! கணக்கற்ற கு3ணங்களை உடையவனாயிருந்த போதிலும் உமக்கு ஆறே கு3ணங்கள் முக்கியமானவை கள். தேவரீர் உலகத்தை வயிற்றில் வைத்துக்கொண் டிருப்பதுபோல், இக்கு3ணங்கள் மற்ற கு3ணங்களைத் தமக் குள் கொண்டிருக்கின்றனவன்றோ.]

153. ஸங்க்2யாதும் நைவ ஶக்யந்தே கு3ணா தோ3ஷாஶ்ச ஶார்ங்கி3ண:।
ஆநந்த்யாத் ப்ரத2மோ ராஶிரபா4வாதே3வ பஶ்சிம:॥
[ஶார்ங்க3மென்னும் வில்லாண்டானுடைய கு3ணங்களையும் தோஷங்களையும் எண்ணமுடியாது. முன்சொன்ன கு3ணங் கள் கணக்கற்றிருப்பதால் எண்ணவொண்ணாதவை. பின் சொன்ன தோ3ஷங்கள் இல்லையாகையால் எண்ணமுடி யாதவை.]

155. கல்யாணம் மங்க3ளம் ஶுப4ம்
[கல்யாணம் மங்க3ளம் ஶுப4ம் என்னுமிவை ஒரே பொருளை உடையவை.]

156. தம் த்3ருஷ்ட்வா தே தத2ா தே3வா: ஶங்க2சக்ரக3தா3த4ரம்।
அபூர்வ ரூபஸம்ஸ்தா2நம் தேஜஸாம் ராஶிமூர்ஜிதம்॥
[ஶங்க2சக்ரக3தா3த4ரனாய், அபூர்வமான திருமேனி அமைப்பையுடையவனாய், உறுதியானவனாய், தேஜோ ராஶியான அந்த ப4க3வானைக் கண்ட தே3வர்கள் (துதிக் கத் தொடங்கினர்).]

151. தை-நா 1-9. 155. அமரம் 1-4-25. 156. வி-பு 1-9-67.



158: ஸர்வதா3ऽபி4க3தஸ் ஸத்3பி4ஸ் ஸமுத்3ர இவ ஸிந்து4பி4:
[நதி3கள் கடலை அடைவதுபோல் நல்லோர்களால் எப் போதும் அடையப்படுபவன் ராமன்.]

158A. தா4தூநாமிவ ஶைலேந்த்3ரோ கு3ணாநாமாகரோ மஹாந்।
[ஒரு சிறந்த மலை தா4துக்களுக்கெல்லாம் இருப்பிடமா யிருப்பதுபோல், ஸ்ரீ ராமபிரானும் கு3ணத்திற்கெல்லாம் பெரியதோர் இருப்பிடமாவார்.]

159. வஶீ வதா3ந்யோ கு3ணவாந் ருஜுஶ் ஶுசிர் ம்ருது3ர்த3யாளுர் மது4ரஸ்ஸ்தி2ரஸ் ஸம:।
க்ருதீ க்ருதஜ்ஞஸ்த்வமஸி ஸ்வபா4வதஸ் ஸமஸ்தகல்யாணகு3ணாம்ருதோத3தி4:॥
[(ஆஶ்ரிதர்களுக்கு) வஶப்பட்டிருப்பவனாய், (தன்னையே தமர்க்கு நல்கும்) வள்ளலாய், ஸௌஶீல்யகு3ணத்தை உடையவனாய், (மனோவாக்காயங்களால்) ஒருபடிப்பட்டி ருப்பவனாய், (நிர்ஹேதுகமாக உபகரிக்கும்) பா4வஶுத்3தி4யை உடையவனாய், அடியார்களுடன் பிரிவைப் பொறுக்கமாட்டாதவனாய், (ஆஶ்ரிதருடைய து3:க்க2த்தை ஸஹிக்கமாட்டாத) த3யையை உடையவனாய், (ஆஶ்ரி தரை ரக்ஷிக்கும் விஷயத்தில்) அசைக்கமுடியாதவனாய், (ஆஶ்ரயிக்குமிடத்தில் எல்லார்க்கும்) ஸமனாய், (ஆஶ்ரி தர்களுடைய காரியங்களைத் தன்னுடையவையாக நினைத் துக்) காரியம் செய்பவனாய், ஆஶ்ரிதர் செய்த சிறிய ஆநுகூல்யத்தையும் பெரிதாக நினைத்திருப்பனாயிருக்கும் நீ இயற்கையாகவே எல்லாக் கல்யாணகு3ணங்களுக்கும் அமுதக்கடலாயிருக்கிறாய்.]

160. நாராயணாத் ப்3ரஹ்மா ஜாயதே। நாராயணாத் ருத்3ரோ ஜாயதே

158. ரா-பா3 1-16. 158 A. ரா-கி 15-21. 159. ஸ்தோ-ர 18.
160. நாராயணோபநிஷத்.

[நாராயணனிடமிருந்து பிரமன் பிறக்கிறான்; நாராயணனிட மிருந்து உருத்திரன் உண்டாகிறான்.]

161 to 164. ப$_4$க$_3$வாந் பவித்ரம் வாஸுதே$_3$வ:। பவித்ரம்
வாஸுதே$_3$வோ ப$_4$க$_3$வாந்। ஸங்கர்ஷணோ ப$_4$க$_3$வாந்।
ப்ரத்$_3$யும்நோ ப$_4$க$_3$வாந்।

[பரிஶுத்$_3$த$_4$னை ப$_4$க$_3$வான் வாஸுதே$_3$வன். பரிஶுத்$_3$த$_4$ னாய் வாஸுதே$_3$வனெனப்படும் ப$_4$க$_3$வான்; ஸங்கர்ஷணனை ப$_4$க$_3$வான்; ப்ரத்$_3$யும்நனை ப$_4$க$_3$வான்]

165. வேதே$_3$ ராமாயணே சைவ புராணே பா$_4$ரதே தத$_2$ா।
ஆதெ$_3$ள மத்$_4$யே தத$_2$ாந்தே ச விஷ்ணுஸ் ஸர்வத்ர
கீ$_3$யதே ॥

[வேத$_3$ங்களிலும், ராமாயண பா$_4$ரதங்களாகிற இதிஹா ஸங்களிலும், புராணங்களிலும் முதலிலும், நடுவிலும், முடிவிலும் மற்றெல்லாவிடத்திலும் விஷ்ணுவே பாடப் படுகிறான்.]

166. ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி$_3$ ஸந்நிவிஷ்டோ
மத்தஸ் ஸ்ம்ருதிர் ஜ்ஞாநமபோஹநஞ்ச।
வேதை$_3$ஶ்ச ஸர்வைரஹமேவ வேத்$_3$யோ
வேத$_3$ாந்தக்ருத் வேத$_3$விதே$_3$வ சாஹம் ॥

[எல்லாருடைய ஹ்ருத$_3$யத்திலும் நான் அமர்ந்திருக் கிறேன். என்னிடமிருந்தே நினைவும், ஜ்ஞானமும், மறதி யும் உண்டாகின்றன. எல்லா வேத$_3$ங்களாலும் அறியப் படுபவன் நானே. வேத$_3$த்தில் சொல்லப்பட்ட ப$_2$லன் களைக் கொடுப்பவனும், வேத$_3$த்தை அறிவிப்பவனும் நானே.]

167. யச்ச கிஞ்சித் ஜக$_3$த்யஸ்மிந் த்$_3$ருஶ்யதே ஶ்ரூயதேऽபி வா।
அந்தர் ப$_3$ஹிஶ்ச தத் ஸர்வம் வ்யாப்ய
நாராயண: ஸ்தி$_2$த: ॥

161 to 164. ரஹஸ்யாம்நாயம். 165.
166. கீ$_3$தை 15-15. 167. தை-நா 11.



[இவ்வுலகில் காண்பனவும் கேட்பனவுமாயிருக்கும் பொருள் களெல்லாவற்றிலும் உள்ளும் புறமும் நாராயணன் வியாபித்து நிற்கிறான்.]

168. தஸ்ய மத்$_4$யே வஹ்நிஶிக$_2$ா அணீயோர்த்$_4$வா வ்யவஸ்தி$_2$த:।
நீலதோயத$_3$மத்$_4$யஸ்த$_2$ா வித்$_3$யுல்லேகே$_2$வ பா$_4$ஸ்வரா।
நீவாரஶூகவத் தந்வீ பீதாபா$_4$ ஸ்யாத் தநூபமா।
தஸ்யாஶ் ஶிக$_2$ாயா மத்$_4$யே பரமாத்மா வ்யவஸ்தி$_2$த:।
ஸ ப்$_3$ரஹ்மா ஸ ஶிவஸ்ஸேந்த்$_3$ரஸ் ஸோக்ஷர:
பரமஸ் ஸ்வராட் ॥

[அந்த இருதயகமலத்தின் நடுவில், மெல்லியதும் மேல்நோக் கினதுமான அக்$_3$நிஶிகை$_2$ (பரமாத்மாவின் தி$_3$வ்யமங்க$_3$ள விக்$_3$ரஹம்) இருக்கிறது. (அது) நீலமேக$_4$த்தை உட் கொண்ட மின்னல்போல் பிரகாஶமுள்ளதாகவும், நெல் நுனிபோல் சிறிதாகவும், மஞ்சள் நிறமுள்ளதாகவும், ஒப்பற்றதாகவும் இருக்கிறது. அந்த ஶிகை$_2$யின் நடுவில் பரமாத்மா விளங்குகிறான். அவனே பிரமனுக்கும் அந்தர் யாமி; அவனே ஶிவனுக்கும் அந்தர்யாமி; அவனே இந் திரனுக்கும் அந்தர்யாமி; (பிரமன் முதலியவர்களைக் காட் டிலும்) மேலானவனும், கர்மத்திற்கு வஶப்படாதவனும், அழிவற்றவனுமான முக்தாத்மாவுக்கும் அவனே அந் தர்யாமி.]

169. ஸ்வோஜ்ஜீவநேச்ச$_2$ா யதி$_3$ தே ஸ்வஸத்தாயாம்
ஸ்ப்ருஹா யதி$_3$।
ஆத்மதா$_3$ஸ்யம் ஹரே: ஸ்வாம்யம் ஸ்வபா$_4$வஞ்ச
ஸதா$_3$ ஸ்மர ॥

[உன்னுடைய உஜ்ஜீவனத்தில் உனக்கு விருப்பமிருக்கு மாகில், உன் இருப்பில் ஆசையிருக்குமாகில், ஆத்மா வினுடைய தா$_3$ஸனாயிருக்கும் தன்மையையும், ஹரியினு டைய ஸ்வாமியாயிருக்கும் தன்மையையும் (இவைகளின்) இயல்வையும் எப்போதும் நினைப்பாயாக]

168. தை-நா 11. 169. விஷ்ணுதத்வம்.

170. த்வத்பாத₃ பங்கஜ பரிக்₃ரஹ த₃ந்ய ஜந்மா
பூ₄யாஸமித்யபி₄நிவேஶகத₃ர்த்₃யமாந: ।
ப்₄ராம்யந் ந்ருமாம்ஸபணநாய பரேதபூ₄மா-
வாகர்ண்ய பீ₄ரு ருதி₃தாநி தவாக₃தோ ऽஸ்மி ॥

[ப₄யந்த ஸ்வப₄ாவமுள்ளவளே! தாமரைபோன்ற உன்பாத₃ங்களைப் பிடிப்பதன்மூலம் பிறவிப்பயன் பெறலாம் என்னும் ஆசையினாலே மனம் வருந்தி, மனிதமாம்சத்தைப் பெறுவதன் பொருட்டு மயானத்தில் சுற்றிக்கொண்டிருக்கும் நான், உன்னுடைய அழுகைக் குரலைக்கேட்டு வந்திருக்கிறேன்.]

171. கிம் ஶீதலை: க்லமவிநோதி₃பி₄ரார்த்₃ரவாதாந்
ஸஞ்சாரயாமி நளிநீத₃ள தாலவ்ருந்தை: ।
அங்கே நித₄ாய கரபோ₄ரு யதா₂ஸுக₂ம் தே
ஸம்வாஹயாமி சரணவுத பத்₃மதாம்ரௌ ॥

[கரப₄ம்போன்ற துடையை உடைய ஶகுந்தலே! ஶ்ரமத்தைப்போக்கும் குளிர்ந்த தாமரையிதழாலான விசிறியாலே குளிர்ந்த காற்றை உன் மேல் வீசச்செய்யலாமா? அல்லது தாமரைபோல் சிவந்த உன் பாத₃ங்களை என் மடியில் வைத்துக்கொண்டு ஸுக₂மாக வருடலாமா?]

172. தத₃ஸ்ய ப்ரியமபி₄ பாதோ₂ அஶ்யாம்
நரோ யத்ர தே₃வயவோ மத₃ந்தி ।
உருக்ரமஸ்ய ஸ ஹி ப₃ந்து₄ரித்த₂ா
விஷ்ணோ: பதே₃ பரமே மத்₄வ உத்ஸ: ॥

[எந்த கங்காதீர்த்த₂விஷயத்தில், தே₃வத்வத்தை விரும்பும் மனிதர்கள் ஸந்தோஷிக்கிறார்களோ, இனியதாகவிருக்கும் இந்த ப₄க₃வானுடைய அந்த ஸ்ரீபாத₃தீர்த்த₂த்தை ஆத₃ரவுடன் பானம் செய்வேனாக. அப்படிக் குடிப்பவன் திரிவிக்ரமனுக்கு ப₃ந்து₄வாவான். இம்மாதிரியாக விஷ்ணுவினுடைய மேலான திருவடியில் அம்ருதத்தினுடைய ப்ரவாஹம் உண்டாகிறது.]

170. மாலதீமாத₄வம். 171. ஶாகுந்தலம் 3-18.
172. ருக்-அஷ்டக 2-2-24-5 யஜுர் 2-4-6.



173. தவாம்ருதஸ்யந்தி₃நி பாத₃பங்கஜே
நிவேஶிதாத்மா கத₂மந்யதி₃ச்ச₂தி? ।
ஸ்தி₂தே ऽரவிந்தே₃ மகரந்த₃நிர்ப்ப₄ரே
மது₄வ்ரதோ நேக்ஷுரகம் ஹி வீக்ஷதே ॥

[அம்ருதத்தைப் பெருக்குகிற உன் திருவடித் தாமரையில் (உன் அருளாலே) வைக்கப்பட்ட மனமானது மற்றொன்றை எப்படி விரும்பும்? தேன் நிறைந்த செந்தாமரையானது இருக்கும்பொழுது வண்டு முள்ளிப்பூவைக் காணவும்மாட்டாதன்றோ.]

174. தே₃வாநாம் த₃ாநவாநாம் ச ஸாமாந்யமதி₄தைவதம் ।
ஸர்வதா₃ சரணத்₃வந்த்₃வம் வ்ரஜாமி ஶரணம் தவ ॥

[விஷ்ணுப₄க்தியுடையவர்களும் ப₄க₃வத்₃ப₄க்தியற்றவர்களும் எப்போதும் ஸமானமாகப் பற்றலாம்படியிருக்கும் உன்னுடைய திருவடியிணையை உபாயமாக நிஶ்சயிக்கிறேன்.]

175. விஶ்வத: பர்யேதி

[பரமாத்மாவைச் சுற்றிலும் ப்ரத₃க்ஷிணம் செய்கிறான்.]

176. ஸக்ருத் த்வத₃ாகாரவிலோகநாஶயா
த்ருணீக்ருதாநுத்தமபு₄க்திமுக்திபி₄: ।
மஹாத்மபி₄ர் மாமவலோக்யதாம் நய
க்ஷணே ऽபி தே யத்₃விரஹோ ऽதிது₃ஸ்ஸஹ: ॥

[எந்தப் பெரியோர்களின் பிரிவானது உனக்கு ஒரு கணப்பொழுதும் மிகவும் பொறுக்கமுடியாததாயிருக்கிறதோ, ஒருதடவை உன்னுடைய திருமேனியைக் காணவேணும் என்னும் ஆசையினால் த்ருணம்போல் நினைக்கப்பட்ட மேலான போ₄க₃ங்களையும், மோக்ஷத்தையும் உடையவர்களான அந்தப் பெரியோர்களால் கடாக்ஷிக்கத்தக்கவனாயிருக்கும் தன்மையை (அடையும்படி) என்னைச் செய்தருளவேண்டும்.]

173. ஸ்தோ-ர 27. 174. ஜி-ஸ்தோ 2. 175. 176. ஸ்தோ-ர 56.

177. து$_3$ர்க்க$_3$தாவபி ஜாதாயாம் த்வத்$_3$க$_3$தோ மே மநோரத$_2$:
யதி$_3$ நாஶம் ந விந்தே$_3$த தாவதாऽஸ்மி க்ருதீ ஸதா$_3$ ॥

[தேவரீரிடத்தில் ஈடுபட்டிருக்கிற என்னுடைய மநோரத$_2$மானது, மிகவும் கீழான நிலை ஏற்பட்டபோதிலும் அழியாதிருக்குமேயாகில், அவ்வளவாலே எப்பொழுதும் க்ருதக்ருத்யனாயிருக்கிறேன்.]

178. ப்$_3$ரஹ்ம வேத$_3$ ப்$_3$ரஹ்மைவ ப$_4$வதி

[ப்$_3$ரஹ்மத்தை உபாஸிப்பவன் ப்$_3$ரஹ்மத்தைப்போலாகிறான்.]

179. ப்$_3$ரஹ்மவித$_3$ாப்நோதி பரம்

[ப்$_3$ரஹ்மத்தையறிந்தவன் மேலான ப$_2$லனை அடைகிறான்.]

180. ஸ ஏவ ஸ்ருஜ்யஸ் ஸ ச ஸர்க்க$_3$கர்த்தா
ஸ ஏவ பாத்யத்தி ச பால்யதே ச ।
ப்$_3$ரஹ்மாத்$_3$யவஸ்த$_2$ாபி$_4$ரஶேஷமூர்த்திர் விஷ்ணுர்
வரிஷ்டே$_2$ா வரதே$_3$ா வரேண்ய: ॥

[ஸ்ருஷ்டி செய்யப்படுபவனும் அவனே; பிரமன் முதலிய அவஸ்தை$_2$களால் ஸ்ருஷ்டி செய்பவனும் அவனே; அவனே (உலகை) ரக்ஷிக்கிறான்; (உலகை) விழுங்குகிறான்; அவனே காப்பாற்றப்படுகிறான். எல்லாவற்றையும் ஶரீரமாகக்கொண்ட விஷ்ணுவே மேலானவன்; வரங்களைத் தருபவன்; வரிக்கத்தகுந்தவன்.]

181. பூ$_4$ம நிந்தா$_3$ ப்ரஶம்ஸாஸு நித்யயோகே$_3$ऽதிஶாயநே ।
ஸம்ப$_3$ந்தே$_4$ऽஸ்திவிவக்ஷாயாம் ப$_4$வந்தி மதுப$_3$ாத$_3$ய: ॥

[மதுப் (மத்) முதலான விகுதிகள் மேலே சொல்லப்போகும் அர்த்த$_2$ங்களில் வருகின்றன; -(1) அதி$_4$கம் (கோ$_3$மாந்$_3$– அதி$_4$கமான பசுக்களை உடையவன்) (2) நிந்தை$_3$ (ரோக$_3$வாந்-வியாதி$_4$யை உடையவன்) (3) ஸ்தோத்ரம் (ரூபவதீ- அழகிய உருவை உடையவள்) (4) எப்போதும் சேர்ந்திருப்பது (க்ஷீரிணோ வ்ருக்ஷா:- எப்போதும் பாலையுடைய மரங்கள்) (5) அதி$_4$க கு$_3$ணமுள்ளதாயிருப்பது (ஶக்திமாந் — அதி$_4$க ஶக்தியுள்ளவன்) (6) சேர்க்கை (த$_3$ண்ட$_3$- தடியை உடையவன்) (7) இருப்பதைச் சொல்லுவது (பர்வதோ வஹ்நிமாந் — மலையில் நெருப்பிருக்கிறது.)]

177. ஜி-ஸ்தோ 12. 178. முண்ட$_3$ 3-2-9. 179. தை-ஆ 1.
180. வி-பு 1-2-70. 181. வார்த்திகம் 5-2-14.



182. ராம ராம நயநாபி$_4$ராமதாமாஶயஸ்ய ஸத்$_3$ருஶீம்
ஸமுத்$_3$வஹந், ஸர்வதே$_3$வஹ்ருத$_3$யங்க$_3$மோऽஸி

[ராமனே! (அவரவர்) விருப்பத்திற்குத் தகுந்தவாறு கண்ணுக்கு இனிமையாயிருக்கையை உடையவனாய், எல்லா தே$_3$வர்களுக்கும் நெஞ்சுக்கினியனாயிருக்கிறாய்.]

183. ராமமிந்தீ$_3$வரஶ்யாமம் கந்த$_3$ர்ப்பஸத்$_3$ருஶப்ரப$_4$ம் ।
ப$_3$பூ$_4$வேந்த்$_3$ரோபமம் த்$_3$ருஷ்ட்வா ராக்ஷஸீ
காமமோஹிதா ॥

[கருநெய்தல் புஷ்பத்தைப்போல் கருநிறமுடையவனாய், மன்மத$_2$னைப்போன்ற அழகையுடையவனாய், இந்திரனுக்கு ஒப்பானவனான ராமனைக் கண்டவுடன் ராக்ஷஸியானவள் காமத்தினால் மோஹமுற்றாள்.]

184. தருணௌ ரூபஸம்பந்நௌ ஸுகுமாரௌ மஹாப$_3$லௌ ।
புண்ட$_3$ரீகவிஶாலாக்ஷௌ சீரக்ருஷ்ணாஜிநாம்ப$_3$ரௌ ॥

[(ராமலக்ஷ்மணர்கள்) வாலிபமானவர்கள்; அழகு நிறைந்தவர்கள்; ஸௌகுமார்யத்தை உடையவர்கள்; அதி$_4$கமான ப$_3$லமுள்ளவர்கள். தாமரைபோன்ற அகன்ற கண்களை உடையவர்கள்; மரவுரியையும் மான் தோலையும் உடுத்தவர்கள்.]

185. அதி$_4$ஜ்யத$_4$ந்வாநமவேக்ஷ்ய ராமம்
சரந்தமேகாந்த விலாஸிநீபி$_4$: ।
நூநம் ப$_3$பூ$_4$வுர் வநதே$_3$வதாஶ்ச
மர்த்யாங்க$_3$நாஜந்மகுதூஹலிந்ய: ॥

183 ரா-ஆ 17-9. 184. ரா-ஆ 19-14.

[அழகிய பெண்களுடன் நாணேற்றின வில்லை ஏந்தியவனாய்ச் செல்லும் ராமனைக் கண்டதும் வநதே3வதைகளும் மனிதப்பெண்ணுருக்கொள்ள ஆசைகொண்டனர்.]

186. ராம: கமலபத்ராக்ஷ: ஸர்வஸத்வமநோஹர: ।
ரூபதா3க்ஷிண்ய ஸம்பந்ந: ப்ரஸூதோ ஜநகாத்மஜே ॥

[ஜனகராஜன் திருமகளாரே! தாமரையிதழ்போன்ற கண்ணையுடையவனாய், (விலங்காகிற என்னையுள்ளிட்ட) எல்லாப் பிராணிகளின் நெஞ்சையும் கவர்பவனாய், வடிவழகையும், கு3ணங்களையும் உடையவனாய்ப் பிறந்திருக்கிறான் ராமபிரான்.]

187. ரூபஸம்ஹநநம் லக்ஷ்மீம் ஸௌகுமார்யம் ஸுவேஷதாம் ।
த3த்3ருஶு: விஸ்மிதாகாரா ராமஸ்ய வநவாஸிந: ॥

[ராமனுடைய உருவ அமைப்பையும், அழகையும், மென்மையையும், அழகிய வேஷமுடைத்தாயிருக்கையையும் வநவாஸிகள் ஆஶ்சர்யம் மிக்க வடிவையுடையவர்களாய்க் கண்டனர்.]

188. பாஷாணகௌ3தமவதூ4வபுராப்திஹேது:

[கல்லாய்க் கிடந்த கௌ3தமபத்னியையும் பெண்ணாக்கக் காரணமாயிருந்த (வடிவழகு.)]

189. தே வயம் ப4வதா ரக்ஷ்யா ப4வத்3விஷயவாஸிந: ।
நக3ரஸ்தோ2 வநஸ்தோ2 வா த்வம் நோ ராஜா ஜநேஶ்வர: ॥

[உம் தேசத்தில் வஸிக்கும் நாங்கள் உம்மால் ரக்ஷிக்கப்பட வேண்டியவர்கள்; நரபதியான நீரே நக3ரத்திலிருந்தாலும், வநத்திலிருந்தாலும் எங்களுக்கு அரசனாவீர்.]

190. பத்ரம் புஷ்பம் ப2லம் தோயம் யோ மே ப4க்த்யா ப்ரயச்ச2தி ।
தத3ஹம் ப4க்த்யுபஹ்ருதம் அஶ்நாமி ப்ரயதாத்மந: ॥

---

186. ரா-ஸு 35-8. 187. ரா-ஆ 1-13. 189. ரா-ஆ 1-20.
190. கீ3தை 9-26.



[ஓரிலையாவது, மலராவது, பழமாவது, ஜலமாவது எவனொருவன் எனக்கு ப4க்தியுடன் கொடுக்கிறானோ, மநஸ்ஸை அடக்கிய அந்த ப4க்தனாலே ப4க்தியுடன் அளிக்கப்பட்ட அவற்றை (கிடைத்தற்கரியது கிடைத்தாற்போலே) உண்கிறேன்.]

191. ஸ்நேஹபூர்வமநுத்4யாநம் ப4க்திரித்யபி4தீ4யதே ।
ப4ஜ இத்யேஷ தா4துர்வை ஸேவாயாம் பரிகீர்த்தித: ॥
தஸ்மாத் ஸேவா பு3தை4: ப்ரோக்தா ப4க்திஶப்3தே3ந பூ4யஸீ ॥

[ஸ்நேஹத்தை முன்னிட்ட தியானம் ப4க்தியெனப்படுகிறது. 'ப4ஜ' என்கிற தா4து 'ஸேவை' என்னும் அர்த்த2த்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் மேலான ஸேவையே பெரியோர்களால் ப4க்திஶப்3த3த்தினால் சொல்லப்படுகிறது.]

192. தத் த்3வயம் ஸக்ருது3ச்சாரோ ப4வதி

[அந்த த்3வயத்தை ஒரு தடவை உச்சரித்தால் போதுமானது.]

193. யந்முஹூர்த்தம் க்ஷணம் வாऽபி வாஸுதே3வோ ந சிந்த்யதே ।
ஸா ஹாநிஸ்தந் மஹச்சி2த்3ரம் ஸா ப்4ராந்திஸ் ஸா ச விக்ரியா ॥

[யாதொரு முஹூர்த்தத்திலாவது, கணத்திலாவது வாஸுதே3வன் நினைக்கப்படுவதில்லையோ, அதுவே ஹானி; அதுவே பெருந்துன்பம்; அதுவே மயக்கம்; அதுவே விகாரம்.]

194. அண்டா3நாந்து ஸஹஸ்ராணாம் ஸஹஸ்ராண்யயுதாநி ச ।
ஈத்3ருஶாநாம் ததா2 தத்ர கோடிகோடிஶதாநி ச ॥

['அந்த ப்ரக்ருதியில் இம்மாதிரியான பல கோடி நூறாயிரம் அண்ட3ங்கள் இருக்கின்றன" என்பது ஸாரார்த்த2ம்.]

---

191. லிங்க3புராணம் உத்தரபா4க3ம். 192. த்3வயோபநிஷத்.
193. கா3ருட3-பூர்வ 222-22. 194. வி-பு 2-7-27.

195. ஆப்₃ரஹ்ம பு₄வநால்லோகா: புநராவர்த்திநோ(அ)ர்ஜுந ।
மாமுபேத்ய து கௌந்தேய புநர் ஜந்ம ந வித்₃யதே ॥

[குந்திபுத்ரனான அர்ஜுநா! ப்₃ரஹ்மலோகமிருக எல்லா உலகங்களும் அழியக்கூடியவை. என்னை அடைந்தபிறகோ வென்னில மறுபடியும் பிறப்பில்லை.]

196. புரம் ஹிரண்மயிம் ப்₃ரஹ்மா விவேஶாபராஜிதா(ம்)

[அபராஜிதையென்று பெயர்பெற்ற பொன்மயமான நக₃ரத்தினுள் ப்₃ரஹ்மம் ப்ரவேஶித்தது.]

197. ததஸ் த்வஹம் சோத்தமசாபபா₃ணத்₄ருக்
ஸ்தி₂தோ(அ)ப₄வம் தத்ர ஸ யத்ர லக்ஷ்மண: ।
அதந்த்₃ரிபி₄ர் ஜ்ஞாதிபி₄ராத்தகார்முகைர்
மஹேந்த்₃ரகல்பம் பரிபாலயம்ஸ் தத₃ா ॥

[அதன் பிறகு (லக்ஷ்மணன் மேலே அதிஶங்கை கொண்ட) நான் மேலான விலலேயும் அம்பையும் ஏந்திக்கொண்டு, (என்னிடமும் அதிஶங்கைகொண்டு) சோம்பலில்லாதவர் களாய், வில்லேந்தியவர்களாயிருக்கும் என் உறவினர் களுடன் கூட மஹேந்திரனைப்போன்ற ராமனை லக்ஷ்மண னுக்கருகில் நின்று ரக்ஷித்து நின்றேன்.]

198. தத்₃ விஷ்ணோ: பரமம் பத₃ம் ஸதா₃ பஶ்யந்தி ஸூரய: ।
தி₃வீவ சக்ஷுராததம் ॥
தத்₃ விப்ராஸோ விபந்யவோ ஜாக்₃ருவாம்ஸஸ் ஸமிந்த₄தே।
விஷ்ணோர்யத் பரமம் பத₃ம் ॥

[விஷ்ணுவினுடைய அந்தப் பரமபத₃த்தை நித்யஸூரிகள் எப்போதும் பார்க்கிறார்கள்; அப்பரமபத₃ம, எல்லா வற்றையும பிரகாசிப்பிப்பவனும், ஆகாயத்திலிருப்பவனும், உலகிற்கெல்லாம் கண்ணுயிருப்பவனுமான ஸூர்யன் போல் ப்ரகாஶமுள்ளது. விஷ்ணுவினுடைய யாதொரு

195. கீதை 8-16. 196. தைத்-ஆர 1-28. 197. ரா-அ 87-23.
198. ருக்₃-அஷ்டக 1-2-7; ஸாமவேத₃ம் 3-18-2-4.



பரமபத₃மிருக்கிறதோ, அதில் மேத₄ாவிகளும், துதிப்ப தையே ஸ்வபா₄வமாக உடையவர்களும், ஜாக₃ரூகர்களா யிருப்பவர்களுமான நித்யஸூரிகள் பிரகாசிக்கின்றனர்.]

199. கத₃ா புநஶ் ஶங்க₂ரத₂ாங்க₃கல்பக-
த்₄வஜாரவிந்தா₃ங்குஶ வஜ்ரலாஞ்ச₂நம் ।
த்ரிவிக்ரம! த்வச்சரணம்பு₃ஜத்₃வயம்
மதீ₃யமூர்த்த₄ாநமலங்கரிஷ்யதி ॥

[திரிவிக்ரமாவதாரம் செய்த எம்பிரானே! சங்கு, சக்கரம், கல்பகவருக்ஷம், கொடி, தாமரை, அங்குஶம், வஜ்ராயுத₄ம் இவைகளை அடையாளமாக உடைய உன் திருவடித் தாமரையிணை என் தலையை எப்போதுதான் அலங்கரிக் கப்போகிறது?]

200. தத்₃பா₄வபா₄வமாபந்நஸ் ததோ(அ)ஸௌ பரமாத்மநா ।
ப₄வத்யபே₄தீ₃ பே₄த₃ஶ்ச தஸ்யாஜ்ஞாநக்ருதோ ப₄வேத் ॥

[பரமாத்மாவினுடைய தன்மைகளைப்போன்ற தன்மைகளை அடைந்த இந்த முக்தன் பரமாத்மாவுடன் (கு₃ணங்கள் விஷயத்தில்) பே₄த₃மற்றவனாகிறான். (இப்போது காணப் படும்) பே₄த₃ம் ஜ்ஞாநத்தைக்காட்டிலும் வேறுபட்ட கர்மத் தினால் ஏற்படுவது.]

201. ஏவமுக்தா ஸமுத்பத்₃ய ஸீதா ஶஶிநிப₄ாநநா ।
ப்ரஹர்ஷேணாவருத்₃த₄ா ஸா வ்யாஜஹார ந கிஞ்சந ॥

[சந்திரனையொத்த முகத்தையுடைய ஸீதை ஹனுமானால் இப்படிச் சொல்லப்பட்டவளாய், பேரானந்த₃த்தாலே நெருக்குண்டு ஒரு வார்த்தையும் சொல்லவில்லை.]

202. நோபஜநம் ஸ்மரந்நித₃ம் ஶரீரம்

[ஜனங்களுக்கு அருகிலிருக்கும் இந்த ஶரீரத்தை அவன் நினைப்பதில்லை.]

199. ஸ்தோ-ர 31. 200. வி-பு 6-7-95. 201. ரா-யு 116-14.
202. சா₂ந் 8-12-3.

203. நாஶ்நந்தி ந பிப3ந்தி ஏததே3வாம்ருதம் த்3ருஷ்ட்வா த்ருப்யந்தி

[அவர்கள் உண்பதுமில்லை; குடிப்பதுமில்லை; அம்ருதமான இப்பரமனைக் கண்டு களிக்கிறார்கள்.]

204. கு3ஹேந ஸார்த்த4ம் தத்ரைவ ஸ்தி2தோऽஸ்மி தி3வஸாந் ப3ஹூந் ।
ஆஶயா யதி3வா ராம: புந: ஶப்3த3ாபயேதி3தி ॥

['ராமபிரான் மறுபடியும் கூப்பிடுவாரோ' என்னும் ஆசையாலே குஹனுடன் கூட அங்கேயே பல தினங்கள் தங்கினேன்.]

க3த்3யத்ரய வ்யாக்3யாந ப்ரமாணத்திரட்டு முற்றிற்று.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே ஶரணம்.





# ப்ரமாணத்திரட்டு அட்டவணை

